உ

ஓம் தத் ஸத்

ஸ்ரீ பரப்பிரம்மணே நம:

22-5

# ஈஸாவாஸ்ய

# ப்ரவசனம்

★ ★

உரை ஆசிரியர் :

**ஸ்ரீ ஸ்வாமி யோகானந்தகிரி,**

வேதாந்த ஆசார்யாள்,

பிரம்மானந்த சுவாமிகள் மடம்,

தெற்குவாசல், மதுரை.

காளயுக்தி வருஷம்

1978

உ

# ஈஸாவாஸ்ய

# ப்
# ர
# வ
# ச
# ண
# ம்



உரை ஆசிரியர் :

**ஸ்ரீ ஸ்வாமி யோகானந்தகிரி,**

வேதாந்த ஆசார்யாள்,

பிரம்மானந்த சுவாமிகள் மடம்,

தெற்குவாசல், மதுரை.

2 2 5

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| | 18 | தேரி | தேறி |
| | 26 | திஷத்தை | நிஷத்தை |
| 2 | 11 | யுவநிஷத் | உபநிஷத் |
| 3 | 9 | அதுவேப் | அதுவே |
| 5 | 3 | அகர்தா | அகர்த்தா |
| ஷை | 9 | உபசானை | உபாசனை |
| ஷை | 12 | சாதனக்கள் | சாதனங்கள் |
| 7 | 1 | பொஹூதா | பஹூதா |
| 8 | 25 | சம்பத்தம் | சப்பந்தம் |
| 10 | 7 | கூறுவதும் | கூறுவது |
| 23 | 15 | எத்த | எந்த |
| 29 | 1 | னனத்தேவா | நைனத்தேவா |
| ஷை | 14 | இருக்சின்றது | இருக்கின்றது |
| 46 | 12 | ஞானம்மல்லாபோனல் | ஞானமல்லாதுபோனல் |
| ஷை | 23 | மத்யதனுவாசா | மத்யதவவாசா |
| 54 | 15 | நிலேள்ள | நிலேயுள்ள |
| 71 | 18 | ச்சிவன்ன | சசிவன்ன |
| 73 | 5 | மத்திரம் | மந்திரம் |
| 75 | 4 | உலகத்திம் | உலகத்தில் |
| 76 | 13 | அடைகுறதில்லே | அடைகிறதில்லே |
| 98 | 1 | ஹேற்பூஷன் | ஹேறபூஷன் |
| ஷை | 19 | தலேவனும் | தலேவனும் |
| 100 | 1 | பூர்வபிரஞ்ஞாய | பூர்வபிரஞ்ஞச |
| 101 | 1 | யோவைபிரம்மா | யோபிரம்மா |
| 102 | 11 | பரமேஸ்வரபம் | பரமேஸ்வரரூபம் |
| ஷை | 19 | ஞானபம் | ஞானரூபம் |
| 103 | 14 | தர்மதர்ம | தர்மகர்ம |

ஓம்

பவ சங்கர் தேசிகமே சரணம்.



**ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தஜி,**

(யோக வேதாந்த ஆசார்யாள்)

ஸ்ரீ பிரம்மானந்த சுவாமி மடத்தின் தலைவர்,

தெற்குவாசல், மதுரை.

# மதிப்புரை.

காரைக்குடி கோவிலூர் மடத்து மாணவர்களுள் ஒருவரும் ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச்சதகம் ஸ்ரீ மீனுக்ஷி அம்மையார் தோத்திரப் பாமாலை நூலாசிரியருமாகிய மகா சோமசுந்தரஸ்வாமி அவர்கள் எழுதிய முன்னுரை.

பாண்டியநாட்டுக்கோர் ராஜதானியாய் விளங்குவதும் ஸ்ரீ மீனும்பிகாசமேத ஸ்ரீ சோமசுந்தரேஸ்வரர் எழுந்தருளி விளங்குவதுமாகிய முத்தமிழ்க்ஷேத்திர மதுரையம்பதியின்கண் வேதாந்த சிரவணம் நடந்து வரும் ஆஸ்ரமங்கள் பலவற்றுள் ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் மடமும் ஒன்ருகும். இம்மடத்தில் இன்றும் காலை மாலை விடாது வேதாந்த பாடம் நடந்துவருவது அறிஞர்கள் அறிந்த விஷயம்.

இம்மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ யோகானந்தகிரி சுவாமி அவர்களும் வேதாந்த ஆசாரியரும் ஆவர். 1945ம் வருஷம் காசிக்குச் சென்று 1970ம் வருஷம் வரை சம்ஸ்கிருத நூல்கள் பல பயின்று வந்தவர். வேதாந்த ஆசார்ய பரீக்ஷையில் தேரி நற்சாக்ஷி பத்திரம் பெற்றவர். மடத்து பாடம் நடத்துவதோடு அமையாது வெளியிலும் சென்று சொற்பொழிவாற்றும் திறமையும் வாய்ந்தவர்.

இப்பொழுது இவ்வூர் (மதுரை) ஸ்ரீ சங்கராஸ்ரமத்திலும், ஸ்ரீ பரமானந்தபுரி சுவாமிகள் ஆஸ்ரமத்திலும் சமீபகாலம் துடங்கி உபநிஷத் பிரவசனம் செய்ய ஆரம்பித்து பல உபநிஷத்துக்களை முடித்திருக்கிருர்கள். அவைகளில் ஈசாவாஸ்ய உபநிஷத்தை சிரவணம் செய்துவந்த ஆண்பாலர் பெண்

பாலராகிய இருவகை அறிஞர் பெருமக்களும் சுவாமி களிடம் பிரவசனத்தை அப்படியே கையெழுத்துப் பிரதி ஆக்கித் தந்தால் புஸ்தக வடிவமாக அச்சிட்டு வழங்குகிறோம் என்றார்கள். அவர்களுடைய விருப் பத்திற்கு இணங்க ஆக்கிவைத்திருந்த கையெழுத்துப் பிரதியை அடியேனிடம் காட்டினார்கள். முழுவதும் வாசித்துப் பார்த்தேன். நாம் தெரிந்துகொள்ளத்தக்க பலவிதமான விளக்கங்கள் காணப்படுகின்றன. இன்றுவரை வெளிவந்த ஈசாவாஸ்யோ உபநிஷத் உரைகளில் இந்நூல் சிறப்புற்ற பெரும் விளக்கம் உள்ளதென்றே கருதற்பாலதாய் உள்ளது.

இதுபோன்றே இன்னும் ஏனைய கேனம், கடம், பிரச்னம், முண்டகம், மாண்டூக்யம், தைத்திரீயம், ஐதரேயம், சாந்தோக்யம், பிருகுதாரண்யகம், சுவேதாசுதரம் முதலிய உபநிஷத்துக்களையும் பிர வசனம் செய்து நூலாக்கி நமக்கு தந்தருள ஸ்ரீ சுவாமி அவர்கள் ஆரோக்ய திடகாத்ரமுடன் ஆசந்திரதாரகம், தீர்க்ககால ஜீவிதபுருஷராயிருந்து சிந்தித மனோரதசித்தி சிவஞானச் செல்வம் நிரம்ப அமையபெற்று வாழ்ந்துவரவேண்டுமென்று இறை வன் திருவருளையும் குரு அருளையும், பிரார்த்தித்து வேண்டிக்கொள்வோமாக.

சுபம்! சுபம்!! சுபம்!!!

பிங்கள ஹூ
கார்த்திகைமீ
1-உ புதன்
கிழமை
1—11—77

இங்ஙனம்,
மகா சோமசுந்தர சுவாமிகள்,
கோவிலூர் மடம்.

# ஈசாவாஸ்ய உபநிஷத்-பிரவசனம்.

## பூனந்துரை.

தேவபாஷையில் உபநிஷத் சப்தத்திற்குப் பொருள், புத்தகமன்று, பின்னையாதோவெனின் பிரஹ்ம வித்தையாம். பிரஹ்ம வித்தையை உபநிஷத்தென்று ரிஷிகள் கூறுவார்கள். வித்தை, ஞானம், அறிவு என்பது ஒருபொருள் சொற்கள். எப்படி ஆகாயத்தில் ஆதித்யன் உதயமாகின்றதோ அதுபோல ஞானம் இதயத்தில் உதயமாகின்றது. எந்த விஷயத்தைப்பற்றி ஞானம் உதயமாகின்றதோ அந்த விஷயத்தைப்பற்றிய அஞ்ஞானம் (ஆவரணம்,)(மறைப்பு) நீங்குகின்றது. அஞ்ஞானம், ஆவரணம், மறைப்பு என்பனவெல்லாம் ஒரு பொருளையே தருகின்றன. கடஞானம் கடவிஷயக அஞ்ஞானத்தை நீக்குகின்றது, அதுபோல பிரஹ்மஞானம் பிரஹ்மவிஷயக அஞ்ஞானத்தைப் போக்குகின்றது.

உலகத்தில் பரிச்சின்னப் பொருள்களுக்கு அதிக மஹத்வம் கொடுப்பதற்குக் காரணம் அதற்கு மூல காரண பிரஹ்மத்தைத் தெரியாததேயாகும். எறும்பு முதல் யானை யீருகவுள்ள உயிர்கள் அனைத்திலும் நான் என்று விளங்கிக்கொண்டிருக்கின்ற அந்த ரான்மா பிரஹ்மமேயாம். இதை விளக்கும் பிரஹ்ம வித்தை—ஆத்மவித்தை, ஐக்ய வித்தை, அத்யாத்ம வித்தை யிவையெல்லாம் உபநிஷத்தெனப்படும். உபநிஷத் விஞ்ஞானமின்றி ஜீவபிரஹ்ம ஐக்யம்

உண்டாகமாட்டாது. உண்மைஞானம் உபநிஷத்துக் களால் அல்லாமல் வேறு எந்தப் பிரமாணமூலமாக வும் உண்டாவதில்லை. கண் முதலிய இந்திரியங்கள் அனைத்தும் ரூபமுதலிய விஷயங்களைமட்டும் விளக்கு கின்றன. அவைகள் பூர்ண பிரஹ்மத்தை அல்லது பிரகாச ஆத்மாவை எவ்வாறு விளக்கமுடியும். அத்வைத வஸ்துவை விளக்கும் வலிமை இந்திரி யங்களுக்குக் கிடையாது. பிரஹ்மம், சித்தவஸ்து, சாத்யவஸ்து அன்று. அந்த ஆத்மாவை யறிவதற்கு பிரஹ்மஞானம் அவஸ்யம் வேண்டும். ஆகையால் பிரஹ்மவித்தை யுபநிஷத்.

"ஈஸாவாஸ்யமித்யாதி" பதினெட்டு மந்திரங் களும் சுக்ல யஜுர்வேதத்தின் மாத்யந்தினிசாகையில் உள்ளன. முதன் மந்திரத்தின் வாக்யானுசாரம் இந்த உபநிஷத்திற்கு ஈஸாவாஸ்யம் என்று நாமம் சூட்டப் பட்டது. இதில் பிரஹ்மஞானத்திற்கு அனுகூலமான அந்தரங்க, பஹிரங்க சாதனங்கள் வர்ணிக்கப்பட் டிருக்கின்றன. மற்றைய உபநிஷத்தைப் பார்க்கிலும் இது மந்திர ஸம்ஹிதையாக இருக்கின்றபடியால் மிகச் சிறந்த உபநிஷத்தாகும். இந்தச் சிறிய உப நிஷத்தைக் குருவாயிலாகப் படித்துக் கேட்டுவந்தால் வேதாந்த சித்தாந்தத்தை எளிய முறையில் தெரிந்து கொள்ளலாம்.

வேதத்தில் வருகின்ற மந்திரங்களுக்கு ரிஷி, தேவதை, விநியோகம், ஆவாஹனம் முதலிய சில முறைகள் உண்டு. உலகத்தில் உள்ள பொருள்கள்

தன்னுடைய காரணத்தில் அபின்னமாக இருக்கின்றன. அவைகளுக்கு சுதந்திர இருப்புக்கிடையாது. ஆதலால் சர்வம் பிரஹ்ம சொரூபம்.

3 3 3 3
"ததேவாக்னிஸ்ததாதித்யஸ்தத் வாயுஸ்தது சந்தரமா:
ததேவசுக்ரம் தத்பிரஹ்ம தாஆப: ஸப்ரஜாபதி:

இ-ள். பிரஹ்மம் - அக்னி, அக்னிபிரஹ்மம். சூரியன் பிரஹ்மம், பிரஹ்மம் சூரியன். அதுவே வாயு, அது சந்திரன் அதுவே வேதம் வேதமே பிரஹ்மம். அதுவே ஜலம், ஜலமே பிரஹ்மம். அதுவேப் பிரஜாபதி, பிரஜாபதியே பிரஹ்மம். என்பது பொருள்.

"ந,தஸ்யப் பிரதிமாஸ்தி யஸ்யநாம மஹத்யஸ:"

இ-ள். அந்தப் பூர்ண ஆத்மாவுக்கு ஒப்பு (உவமை) கிடையாது. ஏனெனின், அதனுடைய புகழ் பெரிதாக விளங்குகின்றது என்பது சுருதிப் பொருள்.

3
"யஸ்மாத் ஜாதம் நபுரா கிஞ்ச நைவ" எந்த வஸ்து எல்லா வடிவமாக இருக்கிறதோ அந்த வஸ்துவிற்கு முன்னர் ஒன்றுமில்லையென்பது மந்திரத்தின் பொருள்.

"ஸஓதப்ரோதஸ்ச விபு: பிரஜாஸு" எல்லா உலகமும் அதனிடத்தில் இருந்து உண்டாயிருக்கின்றன. உண்டான ஜகத்தில் அதுவே வியாபித்து

இருக்கிறது. "யஸ்தானி வேத ஸபிது: பிதாஸத்" எவன் ஒருவன் சர்வ அதிஷ்ட்டான் பிரஹ்மத்தை அறிகிருனே அவன் தந்தைக்கும் தந்தையாகின்ருன்.

4 4

"ஸநோபந்துர் ஜனிதா ஸவிதாதா" எவர் ஆத்மாவை பரமாத்மாவாக அறிகிருரோ அவர் நம்முடைய நலத்தைச் செய்கின்றவர் ஆவர். அவரே நம்முடைய உறவினருமாவர், அவர் நமது பிதா, அவர் நம்மைக் காப்பவர் என்பது சுருதிப்பொருள். இந்தமாதிரி ஈஸாவாஸ்ய உபநிஷத்தை விசாரிக்கும்போது பிரஹ்ம திருஷ்டி தெளிவாகின்றது. ஆத்மா பிரஹ்மமாக ஆகிறதில்லை, பின்னை, ஆத்மா பிரஹ்மமாகவேயிருக்கிறது. அவ்வாறிருந்தும் அஞ்ஞான காரணமாக எல்லாவுலகத்தையும் மாயையால் தன்னைப் பரிச்சின்னமாக நினைக்கிருன். ஈஸாவாஸ்ய உபநிஷத்தில் எந்த ஈஸாமூலமாக எல்லாவுலகத்தையும் மறைக்கவேண்டுமென்று கூறியிருக்கிறதோ, அந்த ஈசன்தான் சத்ய வஸ்துவாகும். அதுவே பிரஹ்மமும் ஆம். அதன் அஞ்ஞானத்திஞல்தான் உலகம் வெவ்வேருகக் காணப்படுகிறது.

ஆத்மாவை பிரஹ்மரூபமாகப் பார்க்காவிட்டால் அதுவே தற்கொலையாகும். இவ்வாறு தற்கொலை செய்தவன் ஜனன மரணமென்னும் சக்கரத்தில் அடிக்கடி விழுகிருன். ஈஸாவாஸ்ய உபநிஷத்தில் பிரஹ்ம வித்தையல்லாமலும் கர்மம், உபாசனை, வைராக்கியம், சமாதி முதலிய சாதனங்களும் கூறியிருக்கின்றன. அவையெல்லாம் மனத்தூய்மைக்கே

யென்று அறியவேண்டும். நிர்விஸேஷ பிரஹ்ம ஞானத்திற்கு கர்மம், உபாசனைகள் தேவையில்லை. ஏனெனின்; பிரஹ்மஞானம்-ஆத்மாவை அகர்தா, அபோக்தா, அசம்சாரியென்றெல்லாம் கூறுகின்றது. சவிஸேஷ ஞானந்தான் கர்மம், உபாசனை, யோகங் களில் உபயோகப்படுகின்றது. அனுஷ்டான முழு வதும் அந்தக் கரணசுத்தியின்பொருட்டேயாம். இதை யனுசரித்துத்தான் வேதாந்தத்தில் கர்மம், யோகம், உபசானை முதலிய சாதனங்களை அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றது. ஞானமார்க்கத்தில் கர்மானுஷ்டானத் தினல் அந்தக் கரணபரிபாகம், விவேகம், வைராக்யம் ஷட்சம்பத்தி முதலிய சாதனக்கள் உதயமாகின்றன. மேற்கூறிய சாதனங்கள் வாழ்க்கையில் உறுதிப்பாட் டையுண்டாக்குகின்றன. அதன்பிறகு மனிதன் அதி காரியாகி குருச்மீபஞ்சென்று மகாவாக்யங்களைக் கேட்கின்ருன். அப்பொழுது பிரஹ்மஞானமுண்டா கிறது. சம்சயமிருந்தால் மனனமும், விபரியயம் இருந்தால் நிதித்யாசனமும் செய்யவேண்டும். சம்சய விபரியயமில்லாதுபோனல் மஹாவாக்ய சிரவண மொன்றினலேயே ஞானமுண்டாகும்.

தன்னைத்தான் என்று அறியாததே அஞ்ஞானம். தன்னை பிரஹ்மமென்றறிவதே ஞானமாகும். விசே ஷத்தோடு கூடிய ஞானம் கர்மத்திற்கு அங்கம், நிர்விசேஷஞானம் அங்கியெனப்படும். அங்கம் கௌணம், அங்கி முக்கியம். இந்த விசாரத்தால் வித்தை, அவித்தை, சம்பூதி, அசம்பூதி யிவையெல் லாம் சமுச்சய வடிவமாகும். இந்த உபநிஷத்தில்

ஒன்பதாவது மந்திரமுதல் பதினெட்டாவது மந்திரம் வரை சாதனங்கள் கூறப்படுகின்றன. கர்மத்தை யன்று. இந்த உபநிஷத்து உருவத்தில் சிறியதே யாயினும் பொருளில் மிகப் பெரியது என்பதில் எட்டுணையும் ஐயமின்று.

பவசங்கர தேசிகமே ஸரணம்

உரையாசிரியர்

**சுவாமி யோகானந்தகிரி வேதாந்தாசாரியாள்,**

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமி மடாலயத்தின் தலைவர்,

30, அருப்புக்கோட்டை சாலை

தெற்குவாசல், மதுரை.

.:.ஏகம்சத் விப்ரா-பொஹுதா வதந்தி.:.

ஈஸாவாஸ்ய பிரவசனம்.

# சாந்தி பாடம்

3 3
ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே:
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவ சிஷ்யதே:

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

இ-ள். எல்லோர்க்கும் மங்கலமுண்டாகுக. ஓம் என்பது பரமாத்மாவின் நாமம். சொரூபமும் அதுவே. இறைவனுக்கு அனந்த நாமங்கள் உண்டு. அதில் ஓம் அனன்னிய நாமமாகும். எல்லா உபநிஷத்துக் களும் பிரணவத்திலிருந்தே யுண்டாயிருக்கின்றன. ஆகையால் ஆரம்பத்தில் ஓம்காரம் உச்சரிக்கப்படு கின்றது. இதுவுமது-நூலாசிரியராகிய தம்மிடத்து உண்டாகும் நாஸ்திகப்பிராந்தி நீங்கவும், இந்நூல் இடையூறின்றி இனிது முடியவும், அதிகாரிகள் இந் நூலை அன்புடன் படிக்கவும், சிஷ்டாசாரரூப மங்க லத்தைச் செய்கின்றார் ஓம் என்று. வேதத்தில் விதித்த விதிகளை யனுஷ்டித்துவரும் வியாஸர், வசிஷ்டர், சுகர், வாமதேவர் முதலிய ரிஷிகள் சிஷ்டர் எனப்படு பவர்கள். அவர்கள்ஆசாரம் மங்கலமெனப்படும். மங்கலம் காப்பு. தடைகளைநீக்கும்வியாபாரம் என்பது பொருள்.

ஓம்-சர்வ காரணபரமாத்மன்! குருசீடர்க்குள் இராகதுவேஷம் வராவண்ணம் காத்தருள்வீராக.

3

பூர்ணமத:= பரோக்ஷரூபமாயை. அறியாத காலத்தில் பரோக்ஷம். அதுவும் பிரஹ்மமே. பூர்ணமிதம்= இதம் காரியரூப ஜகத், இந்த ஜகத்தும் பிரஹ்மம். பூர்ணாத் பூர்ணமுதச்யதே = பூர்ணரூப பிரஹ்மத்திலிருந்து, பூர்ணரூபப் பிரபஞ்சம் கடலில் அலை, திரை, குமிழி, நுரைகள் தோன்றியதுபோல் உதச்யதே = உண்டாயின. பூர்ணஸ்ய = பூர்ணமாதாய = (எல்லாம்) பிரமம் என்று அறிந்தபிறகு பூர்ணம் ஏவ அவசிஷ்யதே= எங்கும்நிறைந்த பிரஹ்மமே எஞ்சி நிற்கிறது என்பது மந்திரத்தின் பொருள்.

குறிப்பு: எல்லாம் பூர்ணமென்னும் பதத்திற்கு பிரஹ்மம் என்று பொருள்.

அதஃ—அவ்யக்தரூப மாயை. இதம்—வியக்தரூப உலகம். உதச்யதே—உண்டாயின.

கருத்து—அஞ்ஞானத்தினுல் தோன்றிய உலகம் அனைத்தும் ஞானத்தால் பிரஹ்மமேயென்பதில் எட்டுணை ஐயமுமின்று. ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:. உள்ளிலும், வெளியிலும், உலகம் எங்கும் அமைதி உண்டாகுக. தேகத்தில் உண்டாவன, தெய்வத்தால் உண்டாவன, பூதத்தால் உண்டாவன என்னும் மூன்றுவித கஷ்டங்கள் அனைத்தும் நீங்கட்டும் என்பது மந்திரத்தின் பொருள்.

உபக்ரமம் (நூலின் ஆரம்பம்) "ஈஸாவாஸ்யம்" இத்யாதி மந்திரங்களுக்குக் கர்மத்தோடு சம்பந்தம்

இல்லை. அவைகளுக்கு ஆத்மாவோடு சம்பந்தம் கர்மத்தோடு ஏன் இல்லை எனில், மேற்கூறிய மந்திரங்கள் அனைத்தும் ஆத்மாவின் உண்மை வடிவத்தை விளக்குகின்றன. உண்மை வடிவுமாவன-சுத்தத்வம், அபாபத்வம், ஏகத்வம், அசரீரத்வம் இவைகளாம். இவைகளோடு கர்மத்திற்குச் சம்பந்தம் கூடாதாகலின் இந்த உபநிஷத்திற்கும் கர்மத்தோடு சம்பந்தமில்லை யென்று ஆசாரிய ஸ்ரீ சங்கரபகவத்பாத சுவாமிகள் கூறுகின்றார்கள்.

இந்த உபநிஷத்தை கருமத்தைக் கூறுவதாக ஏன் சொல்லக்கூடாது எனின், கர்மம், உத்பாத்யம், ஸம்ஸ்காரியம், விகாரியம், ஆப்பியம் என நான்கு வகைப்படும். எது உண்டாகிறதோ அது உத்பாத்யம் எனப்படும், குடம்போல. சம்ஸ்காரியம் — சுத்தஞ் செய்வது: ஆடையிலிருக்கிற அழுக்கையகற்றுவது போல. விகாரியம்—மாறுபடுவது, அரிசி அன்ன மாவதுபோல. ஆப்பியம்—அடையப்படுவது, பொருளைப் பெறுவதுபோல. உபநிஷத், எந்த ஆத்மாவை வர்ணிக்கின்றதோ அதில் மேற்கூறிய நான்கும் இன்மையின், ஆத்மாவிற்கும் கருமத்திற்கும் தொடர்பு இன்மையும். ஆத்மா தானாகத் தோன்றுவது மில்லை பிறபொருளைத் தோற்றிவைப்பதுமில்லை. ஆத்மா ஞானவடிவமாயிருப்பதால் அசுத்தமுங் கிடையாது. நெருப்பில் அழுக்குப் பற்றாததுபோல. ஆத்மா வேறுபாடு அற்றது. எப்போதும் ஒருபடித்தாக யிருப்பதால். கயிற்றில் நான்குவித விகல்பந் தோன்றுகின்றன. பூமியின் பிளவு, நீர்த்தாரை, தடி, பாம்பு.

இவைகளால் கயிற்றிற்கு எந்தவிதமான விகாரமுங் கிடையாதல்லவா, அதுபோல ஆத்மாவில் மாயை, ஈசுவரன், அவித்தை, ஜீவன் முதலிய உலகங்கள் தோன்றினாலும் ஆத்மாவிற்கு எந்தவிதமான விகாரமும் கிடையாதென்பது பொருள்.

ஆத்மாவை அடைவதற்குக் கர்மம் உதவியாகும் என்று கூறுவதுஞ் சரியன்று. ஏன்எனின், வியவகாரத்தில் ஞானத்திற்குக் கர்மம் உதவியாக இருக்கும். அதேமாதிரிக் கர்மத்திற்கும் ஞானம் உதவியாக இருக்கும். ஞானத்திற்கும் கருமத்திற்கும் வியவகாரதசையில் உறவுகூடும், ஆனால் பரமார்த்தத்தில் அது பொருந்தாது. ஒரு மரத்தில் கனியைக் கண்டோம். அதைக் கண்பார்த்தது, மனம் நினைத்தது, கால் அங்கு சென்றது, கை பறித்தது, நாக்கு சுவைத்தது. கண் ஞானேந்திரியம், கால் கர்மேந்திரியம், கை கர்மேந்திரியம், நாக்கு ஞானேந்திரியம். உலகத்தில் இவ்வாறு கர்மேந்திரியத்திற்கும் ஞானேந்திரியத்திற்கும் உறவு கூடும். இதைக் கர்ம சமுச்சயமென்பார்கள் வேதாந்தத்தில். பிரஹ்மஞானத்திற்கு இது பொருந்தாது. ஆத்மா நமது சொரூபமாக இருப்பதால் எப்போதும் அடைந்ததாகின்றது. ஆகையால் ஆத்மாவைக் கூறுவதுதான் உபநிஷத்திற்கு முக்கிய தாத்பரியம்.

உபநிஷத் சப்தத்திற்குப் பொருள் தெரியவேண்டுவதும் அவஸ்யமாகும். உப-என்னும் சொல்லுக்குப் பொருள் சமீபம், நி-நிச்சயம், (ஷத்) = விசரணம், அவசாதனம், கதியென மூன்று பொருள்.. கட்டை

நெகிழ்த்துவது விசரணம், அவசாதனம் நாசஞ் செய்வது, கதி = அடைவு. சம்சார பந்தத்தை அறுத்து அவித்தையையும் அதன் காரியரூப சம்சாரத்தையும் நாசஞ் செய்து பிரஹ்மத்தை அடையச் செய்வது உபநிஷத் சப்தத்தின் திரண்ட பொருள்.

3
ஓம் ஈஸாவாஸ்யம் இதம் சர்வம் யத்கிஞ்ச
ஜகத்யாம் ஜகத் |
2 4
தேனத்யக்தேனபுஞ்ஜீதா மாகிருத கஸ்யஸ்வித்
தனம் ||-1

ப-உ. ஜகத்யாம்=வெளிப்படாத மாயையில். யத்கிஞ்சஜகத் = அற்ப வடிவமாகிய இவ்வுலகம் 3 சர்வம் = எல்லாம். இதம் = இந்த உலகமனைத்தும். ஈஸாவாஸ்யம் = ஈசுவரனால் மறைக்க வேண்டும். தேனத்யக்தேன = அந்தத் தியாகத்தினல். புஞ் 2 ஜீதா: = அனுபவிக்கவேண்டும். 4 மாகிருத கஸ்யஸ்வித்தனம் = யாருடைய பொருளையும் விரும்பாதே.

வி-உ. "ஜகத்யாம்" விஷயத்தை விளக்கும் அறிவுவடிவமானமாயையில், அசத்தென்றும் சத்தென்றும் கூறமுடியாதப் பிரகிருதியில். இதம் ரூபமாக விளங்கிக்கொண்டிருக்கும் நாமரூபமான ஜகத்துஎல்லாம், யத்கிஞ்ச — அல்ப்பமேயாகும். எதற்கு அல்ப்பத்தன்மையுண்டோ அதற்கு அவஸ்யம் அழிவுண்டு. "யதல்பம் தன்மர்த்யம்" என்று சுருதி

கூறுகின்றது. இதம் விருத்திக்கு விஷயம் உலகம் அகம் விருத்திக்கு விஷயம் ஆன்மா. விருத்தியும் ஒன்று பொருளும் ஒன்று. அகத்தை நோக்கும்போது அகம் விருத்தியென்றும் புறத்தை நோக்கும்போது இதம் விருத்தியென்றும் சொல்லப்படுகிறது.

இவ்வுலகத்தை "ஈஸாவாஸ்யம்" பிரஹ்மத்தைக் கொண்டு மறைக்கவேண்டும், நாமரூபமாகத் தோற்றிக் கொண்டிருக்கும் இந்த உலகத்தைப் பிரஹ்மரூபமாகப் பார்க்கவேண்டும் என்பது பொருள். மண்ணைக் கொண்டு கடத்தை மறைப்பதுபோல. மண்ணினல் வனைந்த குடத்தை மண்வடிமாகப் பார்ப்பதோடொக்கும். நாமரூபம் தெரிகிறபோது சச்சிதானந்தந் தெரிகிற தில்லை, சச்சிதானந்தம் தெரிகிறபோது நாமரூபந் தெரிகிறதில்லை. மரத்தைக்கண்டால் யானையைக் காணும் யானையைக்கண்டால் மரத்தைக்காணும். பொன்னைக்கொண்டு நகையை மறைப்பதுபோலும், நூலைக்கொண்டு சேலையை மறைப்பதுபோலும் ஆம். விருத்தியை நாமரூபத்திற்குச் செல்லவொட்டாமல் தடுத்து அதிஷ்டான பிரஹ்மத்தில் செலுத்தவேண்டு மென்பது கருத்து.

உத்பத்திரஹிதசேதனம் ஈசுவரத்வம். பிரஹ்ம ஞானத்தினல் பிரபஞ்சத்தை நீக்கவேண்டும். ஆத்ம ஞானமடைந்தபிறகு உலகத்தில் ஞானிகள் எவ்வாறு வியவகாரஞ் செய்கின்றனர்களெனின், தேனத்தி யாகேன—நாமரூபத்தில் இருக்கின்ற ஆசையை விட்டு தியாகவிருத்தியினல் ஆத்மானம் பால



யேதா:— ஆத்மானுசந்தானம் பண்ணிக்கொண்

டிருப்பீர்களாக. அனுசந்தானம் இருவகைத்து. பாஹ்யானுசந்தானம், ஆந்தரானுசந்தானம். அனு சந்தானம் = அடிக்கடி நினைப்பது. நாமரூபத்தை நினைப்பது பாஹ்யானுசந்தானம். சச்சிதானந்தத்தை நினைப்பது ஆந்தரானுசந்தானம் அல்லது பிரஹ் மானுசந்தானம் எனப்படும்.

நாம் அடைந்த நிலையைக் காப்பாற்றுவதற்கு உலகத்தியாகஞ் செய்வது முக்கியமாகும். அஞ்ஞான மகலவேண்டும், சந்தேஹமுண்டாகக்கூடாது, ஜீவன் முக்தியானந்தம் எப்போதும் அனுபவிக்கவேண்டும், துன்பங்கள் ஒழியவேண்டும் என்று நினைத்தால் உலகத்தில் உள்ள அபிமானத்தை விடுதலே நலம்.

மாகிருத கஸ்யஸ்வித்தனம்—எந்தப் பொருளில் யார்க்கு உரிமையிருக்கிறதோ அந்தப்பொருளில் பிறருக்கு ஆசை வரக்கூடாது. " தனம்கஸ்ய " பொருள் யாருக்கு? பரமாத்மாவிற்கு அதை நாம் விரும்பலாமா. இறைவன் பொருளை நாம் விரும்புவது அவனோடு போராடுவதாகும். மாயாப்பிரபஞ்ச முழு வதும் ஈசுவரனுடையது. அதுவும் பிரளயத்தில் இருக்கிறதில்லை. ஆகையால் எதையும் விரும்புவது நன்றல்ல.

பொ—உ. மாயையில் தோற்றுகின்ற இந்த அற்ப வடிவ உலகமனைத்தையும் ஈசுவர வடிவமாகப் பார்த்து விருத்தியை நாமரூபத்திற்குச் செல்லாமல் தடுத்து எவருடைய பொருளையும் விரும்பாமல் தியாக உணர்வினல் ஆத்மாவை யெப்போதும்

நினைத்துக்கொண்டிருக்கவேண்டும் என்பது மந்திரத்தின் பொருள்.

இரண்டாவது மந்திரத்திற்கு முன்னுரை.

பகவான் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள்முதன்மந்திரம் உத்தம அதிகாரியாகிய பரமார்த்த தரிசிகளுக்கும், இரண்டாவது மந்திரம் சம்சாரி மக்களுக்கும் என்று கூறுகின்றார்கள். இந்த உபநிஷத்தின் முதன்மந்திரத்தில் இரண்டு பாதங்களும் மோக்ஷத்தைச் சொல்லுகின்றன. மூன்றாவதுபாதம் இன்பபுருஷார்த்தத்தைத் தெரிவிக்கின்றது. இன்பத்தை நுகரும்போது நமது வலிமைகள் குறையக்கூடாது. நான்காவது பாதத்தில் பொருளைப்பற்றிய புருஷார்த்தம் கூறப்பட்டிருக்கிறது. இரண்டாவது மந்திரத்தில் (அறம்) தரும புருஷார்த்தத்தைக் கூறப்போகின்றது. தருமம், அர்த்தம் காமம் மோக்ஷம் இம்மூன்றிற்கும் காரணம். அறத்தினால் மனத்தூய்மையுண்டாகிறது. தூய்மையான மனதில் சிரவண வாயிலாக ஞானமுண்டாகும். ஆகையால் (கருமத்தை) தருமத்தையிம்மந்திரங் கூறுகின்றது. இதைக் கர்மயோகம் என்பாருமுளர்.

இரண்டாவது மந்திரம்.

குருவன்னேவேஹ கர்மாணிஜி ஜீவிஷேச்சதம் சமா
ஏவம்த்வயி நான்யதேதோஸ்தி நகர்மலிப்யதே
நரே ||-2

ப-உ. இஹ = இந்த சம்சாரத்தில் கர்மகுர்வன் ஏவ = கர்மத்தைச் செய்துகொண்டே. சதம்சமா: = நூறு ஆண்டு. ஜிஜீவிஷேத் = வாழவிரும்பு. (ஹே மனிதனே) ஏவம்துவயி = இந்த மாதிரி வாழ்கின்ற

உனக்கு கர்மம் = வினைகள். நலிப்யதே = பற்ற மாட்டாது. நஅன்யதாஇதோஅஸ்தி = இதைத்தவிர உனக்கு வேறுவழியில்லை.

வி-உ. இஹ-இங்கே, இந்த வாழ்க்கையிலேயே இவ்வுலகில் பிறந்த மக்கள் அனைவரும் சரீரத்தில் இருக்கும்வரை கர்மம் (வினைகளை) செய்துகொண்டே தான் வாழவேண்டும். கர்மங்களைச் சரீரம் நீங்கிய பிறகு செய்யமுடியுமா? முடியாதல்லவா. ஆகையால் கர்மங்களை செய்துகொண்டு வாழ்வாயாக என்பது கருத்து. "கர்மாணிகுருவன்ஏவ" என்னும் பதம் வினையை மனத்தூய்மை வரும்வரை செய் என்று வலியுறுத்துகின்றது.

செய்துகொண்டே "வெறுப்புவந்து"கர்மத்தை விட்டு வாழக்கூடாது. "சதம்சமா:" நூறு ஆண்டு வரை. ஆயுள் உள்ளளவும். "ஜிஜீவிஷேத்" — வாழ விரும்பவேண்டும்.

இந்த தேகத்தில், எந்த சமுதாயத்தில், எந்த வர்க்கத்தில், எந்ததேசத்தில், எந்தஜாதியில் இருந்த போதிலும், அந்தந்த ஜாதி, வர்க்கம், அந்தந்த சமுதாயத்தின் முறைப்படி கர்மங்கள் செய்யவேண்டுமென்பது பொருள். கர்மங்களை யியற்றிக்கொண்டே வாழ்தலால் அது சமுதாயத்திற்கும், சமஷ்டி ஈசுவரனுக்கும் பணியாகின்றது. தங்கள் தங்கள் வர்ண ஆசிரமத்திற்குத் தக்கவாறு வினைகளைச் செய்துகொண்டு வாழ்வது நலம். முந்திய மந்திரத்தில்—நாமரூபத்தில் ஆசை வைக்கக்கூடாது, போகத்தில்

விருப்பு உண்டாகக்கூடாது. பொருளில் லோபம் வரக்கூடாது என்று கூறியிருக்கின்றது அதுபோல இந்த மந்திரத்தில் செய்யவேண்டிய வினைகளைத் தியாகஞ் செய்யக்கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. செய்யவேண்டிய கர்மங்களைச் செய்யவேண்டுமேதவிர விடக்கூடாது.

ஜிஜீவிஷேத்—வாழ்வதற்குமட்டும் விரும்பவேண்டும். விருப்பம் மூன்றுவிதம்— 1 வாழவேண்டுமென விருப்பம், 2 அறியவேண்டுமென விருப்பம், 3 இன்பமாய் இருக்கவேண்டுமென்னும் விருப்பம். ஏனென்றால்? ஆத்மாவிற்கு உண்மை வடிவம்சத், சித், ஆனந்தம். ஆகையால் சத்தென்றதால் வாழ விருப்பமும், சித்து என்றதால் அறிய விருப்பமும், ஆனந்தமென்றதால் இன்பமடையவேண்டுமென்னும் விருப்பமும் மனிதனுக்கு உண்டாகிறது. வேதாந்தரீதியாக இதைத்தான் அஸ்தி, பாதி, பிரியமென்று கூறுகின்ருர்கள் வேதாந்திகள். நமது பூர்ணசொருபத்தைத் தெரியாததால் பரிச்சின்னம் தோற்றுகிறது. தன்னையேகதேசியாகவும், பரிச்சின்னமாகவும் அறிந்ததனுல் மேற்கூறிய விருப்பங்கள் உண்டாகின்றன. தன்னைப் பூர்ண பிரஹ்மம் என்று அறிந்த அக்கணமே யொளியைக்கண்ட இருள்போல விருப்பங்கள் நீங்குகின்றன.

இங்கு சுருதி கூறுவதாவது— "ஜிஜீவிஷேத்" வாழ விரும்பு, போகத்தை விரும்பாதே. சிறிய இல்லத்தில் இருந்து வாழமுடியுமானல் பெரிய மாளிகையை விரும்பாதே. ஒரு ஆடையால் வாழமுடியும் என்ருல் அநேக ஆடைகளை விரும்பாதே. நமது சரீர

நிர்வாகத்திற்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு தான் தேடிக்கொள்ளவேண்டும். அதிக ஆசையால் மனிதன் துன்புறுகின்றான்.

“குருவன் ஏவஇக” செய்துகொண்டேயென்றதால் அதிகாரிகள் — கடமையைக் கண்டிப்பாகச் செய்யவேண்டும் என்பது துணிபு. ஞானிக்கும் இது பொருந்துமாவெனின், இதைப்பற்றி பிரஹ்ம சூத்திரத்தில் இரண்டுசூத்திரம் வருகின்றது—“நாவிஸேஷாத்” (பி. சூ.) ஞானி கர்மத்தைச் செய்துகொண்டே வாழ வேண்டுவதில்லை. ஏனெனின், விதியும், விலக்கும் கர்த்தாவுக்குத்தான். யாருக்குக் கருத்ருத்வ அகங்காரமில்லையோ அவர்களுக்கு மேற்கூறிய விதிநிஷேதம் இன்றாம். யாரிடத்தில் நான் கர்த்தா, கர்மபலபோக்தா வென்னும் அபிமானமில்லையோ அந்த ஞானிக்குக் கர்மம் செய்யவேண்டுமென்னும் நியமம் இல்லை என்பது சூத்திரத்தின் பொருள். அடுத்த சூத்திரம் “அனுமதேர்வா” கர்மம் பிறரும் செய்யவேண்டுமென்னும் எண்ணத்தினால் ஞானி கர்மம் செய்வாறாகில் அவனை யாரும் தடுப்பாரில்லை. சுருதியும் அநுமதி வழங்குகிறது. பிரஹ்மஞானிக்கே அனுமதி வழங்கும்போது அதிகாரிகளுக்குக் கேட்கவாவேண்டும்? கைமுதிக நியாயம்போல என்று அறிக.

நியதங்குருகர்மத்வம் கர்மஜ்யாயோஹ்யகர்மண: (கீதை) அர்ஜுனா! நிச்சயமாக நீ, கர்மத்தைச் செய்வாயாக. சோம்பேறியாக இருப்பதைப் பார்க்கிலும் கர்மஞ்செய்வது உயர்வு. என்று பகவான் கூறுகின்றார்.

கர்மம் செய்யாத ஆலஸ்யம் சாஸ்த்ரத்திற்கு இஷ்டமன்று. சொரூபஸ்திதி மூலகஅகர்மம் இஷ்டம். "அநுமதேர்வா" ஜடபரதர், சுகர், வாமதேவர் முதலிய நிவர்த்திப்பராயணராக இருந்தாலுஞ்சரி, அல்லது ஜனகர், துலாதரன், இராகவன் முதலிய பிரவிருத்திப் பராயணராக இருந்தாலுஞ்சரி கர்மம்செய்ய விரும்பி ேல் ஸாஸ்த்ரம் சம்மதிக்கும். மனிதன் பூரண தத்வத்தையடைவதற்கு நான்கு சாதனங்கள் வேண்டும். 1 விவேகம், 2 வைராக்யம், 3 ஷட்சம்பத்தி, 4 முமுக்ஷுத்வம் என்பனவாம். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இவைகளால் மனிதன் நிறைந்தவனுகின்ருன். முந்திய மந்திரத்தில் ஈசுவரதெரிசனத்தால் மோக்ஷத்தையும், ஆசையில்லாமல் போகத்தை அருந்தவேண்டுமென்பதால் காமத்தையும், பொருளில் லோபங் கூடாதென்பதால் அர்த்தத்தையுங்கூறி, இந்த மந்திரத்தில் தருமத்தைக் கூறியிருக்கிறது. இந்நான்கும் அடைந்தவற்கு அறிவு உண்டாகும்.

## வாழ்க்கையில் நிறைவு.

1 சரீர நிர்வாகமட்டும் விரும்புதல், 2 செய்ய வேண்டிய கருமங்களை முறையாகச் செய்தல், 3 தருமத்தில் முழுநம்பிக்கை, 4 பொருளில் லோபமின்மை, 5 போகத்தில் அனுசக்தி, 6 எங்கும் ஈசுவர தரிசனம். இவை ஆறும் ஜீவனை யீசுவரனுக்கும் பண்புகளாம்.

"ஏவம்த்வயி" இந்தமாதிரி வியவகாரஞ்செய்யும் உனக்கு இதைத்தவிர வேறுவழியின்று. எல்லாம் ஆத்மசொரூபமென்னும் நிலையைத்தவிர வேறுநிலை உயர்ந்ததல்ல, வாழ்க்கையில் இந்தப் பூர்ணத்தன்மை

யொழிய மஹத்தான வஸ்து ஒன்றுமில்லை. இதைத் தவிர அன்யசாதனமுந் தேவையில்லை. மனித வாழ்க்கையில் அடையவேண்டிய பொருளும் இதுவேதான். இதைத்தான் சகஜாவஸ்தையென்று கூறுவார்கள்.

அக்னிர்தேவோ துவிஜாதீனும் முனீனும்
ஹிருதிதைவதம் |
3
பிரதிமாஸ்தூல புத்தினும் சர்வத்ர விதிதாத்
மனும் ||

இ-ள். பிராஹ்மண, க்ஷத்திரிய, வைஸ்ய இம் மூவர்ணத்தார்க்கும் அக்னி தேவதையாகும். முனி ஜனங்கள் இதயத்தில் தெய்வத்தைத் தியானம்பண்ணுகிறார்கள்.

ஸ்தூலமதியை யுடையவர்கள் செம்பு முதலிய விக்ரகங்களை ஆராதனை செய்கின்றார்கள். யார் ஆத்மாவை நன்றாக உணர்ந்திருக்கிறார்களோ அவர்களுக்கு எங்கும் ஆத்மதரிசனம் உண்டாகிறது. ஆகையால் சர்வாத்மபாவத்தைவிட்டு வேறு மார்க்கம் அதிகாரியாகிய உனக்கு இல்லை. இவ்வாறு பிரஹ்ம மார்க்கத்தில் அல்லது நிஷ்காம கர்மமார்க்கத்தில் செல்பவர்க்கு பாப-புண்ணியம், இன்ப-துன்பம், பற்றமாட்டாது,

கர்மம், கர்த்தாவை யநேகப்பிரகாரங் கட்டுகின்றது. வினையின் உதவியாக இருக்கும் சாதனத்தில் (மமத்வம்,) எனதென்னும் தன்மையையுண்டாக்குகிறது. போகத்தில் தன்னையடிமையாக்குகிறது. கர்மஞ் செய்யச்செய்ய உருச்சியையும் அப்யாசத்தையுமுண்டு

பண்ணுகிறது. பிறகு கர்மத்தைச் செய்யாதுபோனால் கவலையை யுண்டுபண்ணுகிறது. பலனையுண்டு பண்ணிப் பந்தத்தில் தள்ளுகின்றது. இவ்வாறு அநேகவிதமாக ஜீவனைக் கட்டுகிறது.

கர்மத்தின் பயனாவன — இன்பமும் துன்பமும். கர்மம் செய்தும் பயன் கிட்டாவிடத்துத் துன்பமுண்டாகிறது. கிட்டியவிடத்து அபிமானமுண்டாகிறது. சுகமும் துக்கமும் அபிமானரூபமேயாகும். இவ்விரண்டும் சாக்ஷி பாஸ்யம். குடமுதலிய பொருள்களைப் போன்றுஆபாசபாஸ்யமன்று, நான் குடத்தையல்லது புத்தகத்தை அறிகிறேன் என்றதுபோல இதம்ரூபமாக விளங்குகிறதில்லை. ஆனால் அகம்ரூபமாக நான் சுகி நான் துக்கியென்னுந் தோற்றமுண்டாகிறது. ஆகையால் சுகமும் துக்கமும் அபிமான ரூபமாம். இவையிரண்டும் பந்தத்திற்குக் காரணமன்று. கர்மமுமன்று. பின்னை அபிமானமே பந்தத்திற்குக் காரணமாகும்.

“தேகாதி தானெனவே சேரபிமானங்கள் பந்தம்” என்று பகவானும் கூறுகின்றார். தேகம், இந்திரியம், மனம். புத்தியாதிகளைத் தான்என்றும், நமது என்றும் சேர—பொருந்துவது அபிமானம், அதுவே பந்தம். கட்டுஆம் என்பது வாக்கியத்தின் பொருள். (கீதாசார தாலாட்டு) “ந-கர்மலிப்யதே நரே” மேற்கூறிய இரண்டுமந்திரங்களிலும் கூறிய சாதனங்களைப் பெற்றவன் நரன். (மனிதன்) அவன்தான் உண்மையான மனிதன். மற்றவர்கள் விலங்குக்குச் சமானம். “சேஷா: பசுசமம் நரா: (நீதிசதகம்) எங்கும் இறைவனைப்பார்ப்பவனுக்கு உலகத்தில் ஜடசேதனமுழுவ

தும் உதவி செய்பவைகளாக அமைகின்றன. கர்மத்தைக் கடமையென்று செய்கிறபோது தன்னைப்பற்றுகிறதில்லை. ஆசையோடு செய்கிற கர்மம் தன்னைப் பிணிக்கின்றது.

கர்மபந்தனம் யாது?

நான் பாவி, நான் புண்ணியாத்மா, இது கர்த்ருத்வம். நான்சுகி நான் துக்கியென்பது போக்த்துருத்வம். நான் இராகி, நான் துவேஷியென்பது அறியாமை. இவையெல்லாம் கர்மபந்தனமாம், இராகதுவேஷமுண்டாகும்போது கர்த்ருத்வம் தானேவரும். அதனால் சுகதுக்கமுண்டாகும். பிறகு சுகத்தில் இராகமும் துக்கத்தில் துவேஷமும் உண்டாகும். இந்தமாதிரி கர்மசக்கரம் சுற்றிக்கொண்டேயிருக்கிறது. தன்னை பரிச்சின்னமாகப் பார்ப்பதாலும், ஆத்மாவையறியாத அஞ்ஞானத்தாலும் இ ரா க து வே ஷ ம் வருகின்றது. இது, எங்கும் ஈசுவரனைப் பார்க்கும்போது நீங்குகின்றது. நமது அகண்ட அபரிச்சின்ன ஆத்மஞானம் எப்போது உதயமாகின்றதோ அப்போது மேற்கூறிய கர்ம பந்தனம் நமக்கு உண்டாகிறதில்லை.

3–வது மந்திரம்

அவதாரிகை.

முந்திய மந்திரங்களில் கூறிய விதிகளை அநுசரித்து நாமரூபத்தில் ஆசையின்மை, எங்கும் ஈசுவர தரிசனம், போகத்தில் தியாகம், பொருளில் லோபமின்மை. யிவைகளை அனுஷ்டிக்கும்போது கர்மஞ் செய்ய மனம் செல்லாது. பயனைக்கருதாது கருமம்

ஏன் செய்வானேன் எனின்? கர்மஞ் செய்யாதிருந் தால் உடலையெடுத்ததற்குப் பயனென்ன? தற்கொலை (ஆத்மகாதி) என்னும் பொருளை விளக்கும்பொருட்டு மூன்றுவது மந்திரம் ஆரம்பிக்கப்படுகிறது. தேகத்தை நாசஞ் செய்வதுமட்டும் தற்கொலையன்று, பின்னை யாதெனின், மேற்கூறிய மந்திரங்களில் கூறிய முறை களை செய்யாதவனே தற்கொலை செய்தவனுவன். இறைவன் கொடுத்த சக்தியை உபயோகம் பண்ணுத வன் ஆத்மகாதி யெனப்படுவன். தற்கொலை செய் பவனுமவனே.

மூன்றுவது மந்திரம்

4 3
அசுர்யா நாமதே லோகா அந்தேன தமஸா
விர்தா: |
4 3
தாம்ஸ்தே பிரேத்யாபிகச்சந்தியேகே
சாத்மஹனோஜனு: || 3

ப–உ. யேகேசாத்மஹனோஜனு: = எந்தமக்கள் ஆத்மாவை கொலைபண்ணுகிறுர்களோ, தேபிரேத்ய = அவர்கள் இறந்தபிறகு, அசுரியாநாமதே லோகா: = அரக்கர்களுக்குத்தகுதியான அந்த உலகமும், அந் தேன = அஞ்ஞானரூபதமஸா = இருளால், ஆவிர்தா: = மறைக்கப்பட்ட, தான் = அந்த உலகத்தை, அபிகச்சந்தி = அடைகின்றுர்கள்.

வி–உ. “யேகேசாத்மஹனோஜனு:”யாரோ ஒரு வன் ஆத்மகாதி — தற்கொலை செய்பவன். இது உயிரோடு இருப்பவனைக் கூறுகின்றது. ஏனென்றுல், பிரேத்ய அபிகச்சந்தியென்னும் பதத்தால் இறந்த

பிறகு அடைகின்ற கதியைக் கூறுகின்றது. இப்பொழுது அவன் உயிரோடு இருக்கிறன். ஆனாலும் (ஆத்மகாதி) தற்கொலை செய்பவன். இவையிரண்டும் முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது. ஆனாலும் ஆத்மகாதியென்பதற்குப் பொருள் நன்றாகத் தெரிய வேண்டும்.

எந்த வஸ்துவுக்கு எந்த வடிவமோ, எதையெப்படி உபயோகிக்க வேண்டுமோ, அதை அவ்வாறு உபயோகிக்காதுபோனால் அதைக் கொலைபண்ணியதாக ஆகும். தங்கத்தைப் பித்தளை விலைக்கு விற்றுவிட்டால் தங்கத்தைக் கொலைசெய்ததாகும். அரசன் ஆண்டிவேடம் போட்டுப் பிக்ஷையெடுப்பானாகில் அவனுடைய அரசத்தன்மை யழிந்துவிட்டதல்லவா. இந்தமாதிரி மனிதஜன்மத்திற்கு முக்கியப்பயன் ஆத்மஞானமாகும். எத்த ஞானம் அன்னிய தேகங்களில் அடையமுடியாதோ அதையடையாமல் வாழ்நாள் முழுவதையும் போகபோக்கியங்களில் செலுத்துவது (ஆத்மகாதம்) தற்கொலையாகும்.

இஹச்சேத் அவேதீத் அதசத்யமஸ்தி

நசேதிஹாவேதின் மஹதீ விநஷ்டி: 1. கே-உப.

பொ-ள், இந்த மனிதஜன்மத்தில் நமது ஆத்மாவை யறிந்துவிட்டால் மனிதஜன்மம் புனிதமாகிவிட்டது. அல்லாதுபோனால் பெரும் நஷ்டமாகிவிடும். அதாவது இன்னும் அனந்தஜன்மம் எடுக்கும்படியாகும்.

நித்யசுத்த, முக்தஆத்மாவை அநித்ய, அசுத்த, பத்தமென்றும், அசங்கத்தைச் சங்கமென்றும்,

அகர்த்தாவை கர்த்தாவென்றும், அபோக்தாவை, போக்தாவென்றும், வியாபகத்தைப் பரிச்சின்னமென்றும், அறிவது (ஆத்மகாதம்) தற்கொலையாகும்.

கர்த்தா மூன்றுவிதமாகும்.-சாத்விககர்த்தா, ராஜஸ கர்த்தா, தாமஸகர்த்தா. சாத்விககர்த்தா கேவலம் கர்மத்தைமட்டும் செய்கின்றான். அவன் பயனை விரும்புகிறதில்லை. "குர்வன்ஏவ இஹகர்மாணி" என்பதற்கு அநுசாரம் வினையைச் செய்கின்றான். ராஜஸ கர்த்தா — குருவனபி அபிலஷனபி. அதாவது கர்மமுஞ்செய்கின்றான் பயனையும் விரும்புகின்றான். பயனை விரும்பிக் கருமத்தைச் செய்கின்றான் என்பது பொருள். தாமஸகர்த்தாப் பயனைமட்டும் விரும்புகிறான். முயற்சியோ அல்லது கர்மமோ செய்கிறதில்லை. இந்த இராஜஸ் தாமஸ கர்த்தாக்கள்தான் (ஆத்மகாதி) தற்கொலை செய்பவர்கள். ஆத்மகாதிக்குப் பொருள்— அகந்தா மமதாமூலமாகப்பீடிக்கப்பட்டவனும், உலகத்தைப்பார்ப்பவனும், ஆத்மாவைப் பாராதவனும், யாரிடத்தில் ஆசை இருக்கிறதோ, யாரிடத்தில் நிராசையில்லையோ போகமிருந்து தியாகமில்லையோ அவன் தான் ஆத்மகாதியெனப்படுவான்.

" அசுர்யா நாமதே லோகா: " இந்தப் பதத்தினால் நிகழ்காலத்தில் அவன் அடைகின்ற கதியைக் கூறுகின்றது. "தான்ஸ்தே பிரேத்யாபிகச் சந்தி" என்னும் பதத்தால் எதிர்காலத்தின் கதியைக் கூறுகின்றது. நம்மிடத்தில் இரண்டுவிதமான இந்திரியங்கள் இருக்கின்றன – ஞானேந்திரியம், கருமேந்திரியம். இவை இரண்டிலும் ஞானேந்திரியம் எப்பொழுதும்

பிரகாசத்தோடு கூடியது. கர்மேந்திரியம் ஒளியற்றது. கர்மேந்திரியத்தில் பிரகாசமில்லை, ஆனால் தொழில் இருக்கிறது. கண் காது முதலிய பொறிகள் விஷய ஞானத்தைத் தருகின்றன. கர்மேந்திரியம் வினைகளைத் தான் செய்கின்றன. ஒளியைத் தருவதில்லை. இருவகை யிந்திரியமூலமாக விளைகின்ற வினைகள் அந்தமெனப் படும். அந்தம் = அஞ்ஞானரூபஇருள் என்பது பொருள். தருமம் பிரகாசம் பொருந்தியது. ஈஸாவாஸ் யம் என்னும் சிறிய உபநிஷத்தில் அந்தம் என்னும் சப்தம் அநேகதடவை வந்திருக்கின்றது. இதைப்பற் றிச் சிந்திக்கவேண்டும். சிந்தனைசெய்கின்ற மனிதனை யுலகம் வந்திக்கின்றது, சிந்தனை செய்யாதவனை நிந் திக்கின்றது. அந்தம், சிரமம், தருமம் என்பன மூன்று சப்தங்கள். ஞானமில்லாமல் ஞனேத்திரியங்களாலும் கர்மேந்திரியங்களாலும் நிகழும் வினைகள் அந்த மெனப்படும். உலகத்தில் உள்ள எந்த வஸ்து புது மையை யுண்டுபண்ணுகிறதோ அந்த வஸ்து சிரமம் எனப்படும். எந்தவஸ்து உள்ளத்திலிருக்கிற தோஷத் தை நீக்கிக் குணத்தைக் கொடுக்கின்றதோ. அந்தப் பொருள் தருமம் எனப்படும்.

போகமென்பது எது? மாலை, சந்தனம், உயர்ந்த அன்னம், இளம் பெண்கள், உயர்ந்த உணவுகள், மெல்லிய படுக்கைகள், வாசனை திரவியங்கள், மண முள்ள மலர்கள், அநேக சேவகர்கள் இவையனைத் தும் போகங்களாம். இந்த போகங்களை ஞானேந்திரி யங்களால் அனுபவிக்கின்றான். கர்மேந்திரியங்களால் செய்யப்பட்ட கர்மத்திலும் இன்பம் இருக்கிறது. இந்த

இன்பமானது அபிமானத்தால் வந்தது. இவ்வளவு வேலை செய்கின்றேன் இவ்வளவு செய்திருக்கிறேன். என்று உண்டாகும் இன்பம் கர்மத்தில் இருக்கிறது. நான் எவ்வளவு போகமனுபவிக்கிறேன், நல்ல நல்ல போகங்களை யனுபவிக்கிறேன் என்றுண்டாகும் இன்பம் போகத்திலிருக்கிறது. ஆனால் இருவித இன்பமும் அபிமானத்தால் விளைந்தது. உண்மை ஆனந்தமன்று. கர்மேந்திரியம்,, ஞானேந்திரியம், போகம் இவைகள் மூலமாகஅடைகின்றசுகம்ஜடவடிவமாம். ஏனெனின், அவனுடைய ஆசை ஜடத்திலிருக்கிறது. கர்மேந்திரியம், ஞானேந்திரியம், போகம் இம்மூன்றும் ஜடமாகலின் அவனுக்குக் கதியும் ஜடமேயாகும. ஜடத்வம், மூடத்வமிவ்விரண்டும் அந்தம் எனப்படும்.

சித்தத்தைக் காரிய பிரஹ்மத்தில் அல்லது காரணப் பிரஹ்மத்தில் செலுத்தினலும், விருத்தியை யொடுக்கினலும் அல்லது அடிக்கடி யடக்கிவைத்தாலும், நேத்திரத்தை மூடியிருந்தாலும், அல்லது திறந்து இருந்தாலும், இந்த இரண்டில் ஒன்று இருக்கும்வரை ஜடத்வபிராப்தியுண்டாகும். ஆகையால் இவ்விரண்டு நிலையும் ஒன்ருகவேண்டும். சிரமமும் தருமமும் ஒன்ருகவேண்டும். அப்பொழுது அந்தந்தமமென்னும் இருளிலிருந்து நிவிருத்தியுண்டாகும்.

“ அசுர்யாநாமதே லோகா: ” எங்கு ஆலோகம்= பிரகாசமிருக்கிறதோ அது லோகம் அல்லது லோக்யதே யிதிலோகா: எது நுகரும் கர்மத்தினல் விளங்குகின்றதோ அது உலகம். இந்திர, சந்திர. பிரஹ்மாதி உலகங்கள். எவ்வாறு உணவு உண்பதற்கும் ஒளி

வேண்டுமோ அவ்வாறு இன்பதுன்பத்தை நுகருவதற்கும் பிரகாசம் வேண்டுமல்லவா. "அசுர்யா" அசுரர்களுக்குப் பிரிய உலகம் என்பது பொருள். வேதாந்தத்தில்அசுரர் யார்? அசுசு (பிராணனில்) ஏரமந்தே இதி அசுரா: என்பது இலக்கணம். எவர்கள் பிராணனிலும் இந்திரியங்களிலும், போகங்களிலும் ஈடுபட்டிருக்கிறார்களோ அவர்கள் அசுரர் எனப்படுவார்கள். ஞானேந்திரியம் ஒளிவடிவம். கர்மேந்திரியம் இருள்வடிவம். ஞானேந்திரியம் ஏவுபவன், கர்மேந்திரியம் ஏவல்செய்பவன். மனம் இவ்விரண்டையும்இயக்குபவன். எவன் அசுரனோஅவன் இந்திரியாராமன். இவனையிந்திரியங்கள்விஷயத்தில் இழுத்துச்செல்லுகின்றன. அந்தவிஷயம் ஜடம். கர்மத்திலும் போகத்திலும் பற்றுடையவன் ஜடத்தையடைகின்றான் என்பது பொருள். ஜடத்தையடைவதென்றால் என்னை? "அந்தேன தமஸாவிர்தா:" பயங்கர இருளில் மூழ்கின்றார்கள் என்பது கருத்து. மனிதன் இப்பொழுது என்ன எண்ணுகிறானோ இறந்த பிறகும் அதையே அடைகிறான். "யத்பாவயதி தத்பவதி" என்ன நினைக்கின்றானோஅதுவாகின்றானென்பது சுருதி.

பொ-உ. எந்த மக்கள் மனிதஜன்மத்தை யெடுத்தும் அறியவேண்டிய ஆத்மாவை யறியாமல் வாழ்கின்றார்களோ அவர்கள் ஜீவிக்கிறபோது அத்மகாதியால் இருந்து இறந்தபிறகு அரக்கர்களுக்கு யோக்கியமான இருள் உலகத்தை அடைகிறார்கள் என்பது சுருதியின் கருத்து.

4-வது மந்திரத்திற்கு அவதாரிகை.

எல்லோரும் அறியாமையைவிட்டு ஞானிவாழ்க்கையில் வாழவேண்டும். அசுரனுக ஆகாதே, ஆத்மகாதியாகாதே, இருளே வடிவான துன்ப உலகத்தையடையாதே, தியாகத்தைவிட்டவன் அசுரனுகின்றுன். போகத்தில் அதிக ஆசக்தன் அஞ்ஞானம் நிறைந்த இருள் அறையில் நுழைகின்றுன். இவன் ஆத்மகாதி. ஈஸாவாஸ்யமிதம்ஸர்வம் என்ற ஞானமில்லாததால் உயிரோடு இருககும்போதே ஆத்மகாதியாகிறுன். அடிக்கடிப் பிறப்பென்னும்கடலில் விழுகின்றுன். இத்தனைக்கும் காரணம் யாதோவெனின்? ஈசுவரனுக்கு வேருக ஜகத்திற்கு இருப்பு அதாவது சத்தையொப்புக் கொள்வதேயாம். முதல் மந்திரத்தில் ஈசுவரன் என்று எதைக் கூறியிருக்கிறதோ அதைத்தான் இங்கு ஆத்மாவென்று கூறப்படுகிறது. ஈசன் என்னும் பதத்தில் இருக்கும் பரோக்ஷத்தையும், ஆத்மாவென்னும் பதத்திலிருக்கும் பரிச்சின்னத்தையும், எடுத்துவிட்டால் இரண்டுமொன்றுதான்.

இதற்குத்தாத்பரியமாவது—ஆத்மகாதத்தில்இருந்தும் அசுரத்தன்மையிலிருந்தும், அந்தந்தமசிலிருந்தும் விடுபடவேண்டுமாகுல் ஆத்மா பரமாத்மாவின் சொருபஞானம் அவஸ்யம் வேண்டுமென்பதுதான். ஆகையால் வருகிற இரண்டு மந்திரங்களில் ஆத்மசொருபத்தைப்பற்றி வர்ணிக்கின்றது. சுருதி.

(4) அநேஜதேகம் மநஸோ ஜவீயோனைநத்
தேவா ஆப்னுவன் பூர்வமர்ஷத் |
தத்தாவதோ அன்னியானத்யேதிதிஷ்டத்
தஸ்மின் அபோமாதரிஸ்வாததாதி ||-4

ப-உ. அநேஜத் = (ஆத்மா) சலனமற்றது. ஏகம் = ஒன்று. மனஸோ ஜவீயோ = மனதைவிட வேகமாகச் செல்வது. ஏனத் = இந்த ஆத்மாவை. தேவா = இந்திரியாதிகள் ந, ஆப்னுவன் = அடைகிறதில்லை. பூர்வம் அர்ஷத் = முன்னமே அது சென்றிருக்கிறது. தத் = அந்தஆத்மா – தாவதோ அன்யான் = ஓடுகின்ற இந்திரியங்களை. அத்யேதி = தாண்டிவிடுகின்றது. முன்னேயோடிக்கொண்டிருக்கின்ற மனம் பொறிகள் அனைத்தையும் பின்னேத்தள்ளிவிட்டு முன்னே செல்லுகின்றது. திஸ்டத்தஸ்மின் அது இருக்சின்றபொழுது, மாதரிஸ்வா = வாயு. அபோ = எல்லாவுயிர்களுடைய கர்மபலன்களை, ததாதி = தாரணை பண்ணுகின்றது.

வி-உ. சிலர் பிராணனை ஆத்மாவென்று கூறுகின்றார்கள். ஏனெனின் பிராணன் இருந்தால்தான் சரீரமிருக்கிறது இந்தப் பிராணனில்லையென்றால் சரீரமிருக்கிறதில்லை. ஆகையால் பிராணன் ஆத்மா, வென்னும் மதத்தைக் கண்டிக்க "அனேஜத்" என்று கூறப்பட்டது. விசாரிக்கும்போது ஆத்மாவிற்குச் சலனத்தன்மையொருபோதுமின்றாம். ஆத்மா சத்வடிவம். எது தனது வடிவத்தைவிட்டு மாறாது இருக்கிறதோ அது சத்வடிவமெனப்படும். தங்கமானது நகை, காப்பு, கொலுசு, சங்கிலி, நத்து, தோடு முதலியருபமாக

வரினும் தங்கம் மாறுமல் இருக்கிறது, ஆகையால் தங்கம் சத்தாகும். அதனுடையசொரூபத்தில் மாறுதல் இல்லை. வடிவமெல்லாம் ஔபாதிகம். ஆரோபமற்றது. சத்தெனப்படும். அதுவே சத்யம். தத்வமும் அதுவே யாகும்.

"அநேஜத்" ஏஜத்திலிருந்து வேறு. இதில் பிராணனுக்குமட்டு நிஷேதமன்று. காலத்திற்கும் நிஷேதமாம். ஏஜத்திற்குப் பொருள் அசைதல், செல்லுதல். நனவு, (ஜாக்ரம்) கனவு (சுவப்பனம்) உறக்கம் (சுஷுப்தி)இவை மூன்றும் கதிசீலம். அசைவனவாம். ஏனெனின் இம்மூன்று அவஸ்தைகளும் ஒன்றுக்கொன்று வியாவர்தகமாம். விலக்குந்தன்மையுடையது. ஒருஅவஸ்தைவருகிறபோது மற்றொருஅவஸ்தை செல்லுகிறது. வியஷ்டியில் ஜாக்கிராதி அவஸ்தைகள் எப்படி அசையுந்தன்மைகளோ அதுபோல் சமஷ்டியிலும் சிருஷ்டி. ஸ்திதி, பிரளயம் இம்மூன்றும் செல்லுந் தன்மைகளாம். வியஷ்டிப்பிரபஞ்சமுழுவதும் சமஷ்டியில் (ஏஜத்) அசைகின்றன. இவையெல்லாவற்றிலும் வேறுனஆத்மா "அநேஜத்" அசையாததாம். ஸ்த்திரமுள்ளதென்பது பொருள்.

"ஏகம்" = ஆத்மா ஒன்று. வியஷ்டியில் ஒவ்வொரு சரீரமும் நானுவான ஜீவர்களும் சமஷ்டியில் ஒன்றும். பஞ்சபூதங்கள், அகங்காரங்கள் இன்னும் பலவிததத்துவங்கள் பலவாக இருந்தபோதிலும் சமஷ்டியில் ஒன்றேயாகும். தேகத்தில் பேதமேயொழிய தத்துவத்தில் பேதமன்று. அதற்காக ஏகம் என்று கூறியது. தேகபேதம் என்பது யாது? வடிவபேதமேயாகும்.

இந்த பேதத்தால் ஆத்மாவில் பேதமின்று. "மனஸோ ஜவீயோ" மனதைப்பார்க்கிலும் தீவிரமாக செல்லுந் தன்மையது. மெல்லச் செல்பவன் வேகமாகச் செல் பவனைப் பிடிக்கமுடியுமா ? அதுபோல மனஸோ ஜவீயோ — மனதிற்கு அவிஷயமென்பது பொருள். பிரத்யக் விஷயமாகவும் சர்வவியாபிவிஷயமாகவும் ஆகும். மனம் ஒவ்வொரு பொருளையும் வெவ்வேறுக அறிந்து செல்லுகின்றது. எவ்வாறு ஒருவன் ஒவ் வொருபடியாக மேலே யேறுகின்றுனோ அதுபோல மனமும் செல்லுகிறது. ஆனால் ஆத்மாவியாபகம். ஆகையால் யாவற்றிற்கும் முன்னே சென்றிருக்கிறது.

மனம் சங்கற்பவிகற்ப ரூபமாக ஒவ்வொரு பொரு ளையும் சிந்திக்கின்றது. விருப்புவெறுப்பு விஷயங்களை யும், சமாதியில் அவைகளுடைய இன்மையையும் விஷயஞ் செய்கின்றது. நேத்திரம் முற்றிலும் சமீப மான பொருளை யறிகிறதில்லை அதுபோல மனமும் அத்யந்த சமீபமான ஆத்மாவையறிகிறதில்லை. மனம் தன்னுடைய பரிணமத்தையறிகிறதில்லை. அதுபோல தனது அதிஷ்டான ஆத்மாவையறிகிறதில்லை. "அனேஜத்"ஜவீய: என்பது பரஸ்பரம் விரோதம், ஏஜத்அனேஜத், இதுவும் பரஸ்பரம் விரோதம். அசை தல் இன்மை அசைதல். பின்பு, திஷ்டத்என்னும்பதமு மிருக்கிறது. பரிகாரம் —உபாதியால் செல்லுந்தன்மை, உபாதியின்மையால் ஸ்திரத்தன்மை. அதற்கு எப்படி கடஞ்செல்லும்போது கடாகாசம் செல்வதுபோலக் காணப்படுகிறதோ அதுபோல தேகாதிகள் செல்லும் போது ஆத்மா செல்வதுபோலக் காணப்படுகிறது.

குடிபோதையில் இருக்கும் ஒருவனுக்கு பூமி ஸ்திரமாக இருந்தும் சுற்றுவதுபோல் தெரிகிறது. அதுபோல ஆத்மாவும் ஸ்திரமாயும் அசலமாயும் உறுதியாயும் இருந்தும் அசைவதுபோல் தெரிகிறது. மனம் சங்கற்பம் விகற்பம் செய்கிறது. ஆத்மாவில் அதன் சம்ஸ்காரங் கிடையாது. 'நைனத்தேவா' ஆப்னுவன்—தேவா:— என்பதற்குப் பொருள் இந்திரியங்கள். "த்யோதனுத் தேவா:" என்பது இலக்கணம். பிரகாசத்தால் தேவர்கள் என்பது பொருள். "பூர்வம்அர்ஷத்" ஆத்மா முன்னமே சென்றிருக்கிறது. ஆகையால் ஆத்மாவை இந்திரியங்கள் அடைய முடிகிறதில்லை. அர்ஷத்— முன்சென்றிருப்பது. இந்த ஆத்மாவே விஷயத்திற்கு (சத்தா) இருப்பையும், (ஸ்பூர்த்தி) விளக்கத்தையும், (ஆனந்தம்) பிரியத்தையும்கொடுக்கிறது. மனம்எதை விளக்குகின்றதோ அது ஸ்மிருதிரூபமாம். இதன் சாராம்சம் ஆவது மனதின்கதி ஆத்மாவரை செல்ல மாட்டாது. மனம், இந்திரிய உதவியைக்கொண்டு ஆத்மாவை அறிய முடியாதாவெனின், முடியாது என்பதற்காக 'நைனதேவா' என்றது சுருதி.

"ரிஷ்ஹிம்ஸாயாம்" என்னும் வினைப்பகுதியில் இருந்து பிறந்தசொல் ரிஷத் = ஹிம்சையென்பது பொருள். அர்ஷத்—அஹிம்சை. ஆத்மா யாரையும் ஹிம்சிக்காதென்பதுபொருள். இந்திரியங்கள் அந்தந்த விஷயங்களை கிரகிக்கின்றன. ஆத்மா அவைகளை விளக்குகின்றது. வியஷ்டியில் மனம், இந்திரியம் எவ்வாறு ஆத்மாவையடையமுடியாதோ அதுபோல சமஷ்டியில் இந்திராதிதேவர்கள் வருணன், சூரியன்,

சந்திரன், அஸ்வினி குமாரர்கள் முதலிய தேவர்களும் ஆத்மாவையடையமுடியாது. அத்யாத்மம், அதிதெய்வம், அதிபூதம் இவைகளும் ஆத்மாவையடையமுடியாதென்பது பொருள்:

"பராஞ்சிக்கானி வியதிரணத்சுவயம்பூ: தஸ்மாத் பராங்பஸ்யதி நாந்தராத்மன்" (கடசுருதி) பிரஹ்ம தேவர் கானி-மனம் இந்திரியம், முதலியவைகளை வெளிமுகமாகப் படைத்தார். ஆகையால் இவைகள் வெளியே நோக்கிச் செல்லுகின்றன, "நாந்தராத்மன்" அந்தராத்மாவை நோக்கிச் செல்கிறதில்லை: தத்தாவதோ அன்னியான் அத்யேதிதிஷ்டத்-சுவயம் நிலையுள்ளதாக இருந்தும் ஓடுகின்றவர்களைத்தாண்டிவிடுகிறது. அன்யான்–விஷயங்களை. திஷ்டத்–மலைபோல நிலைத்திருக்கிறதென்பது பொருள். பூமி சூரியனைச் சுற்றுகிறது, சந்திரன் பூமியைச் சுற்றுகிறன், சூரியன் மகாசூரியனைச்சுற்றுகிறன். இவ்வாறு கோடி சூரியர்கள் எதில்வசிக்கின்றார்களோ அது பிரஹ்மாண்டம். அதுவும் செல்லுந்தன்மையுடையது. எல்லா பிரஹ்மாண்டமும் ஹிரண்யகர்பனுடைய சங்கற்பத்தில் இருக்கின்றன. சங்கற்பம் சுவயம் அசையும்தன்மையுடையது. பிரஹ்மாவுக்கும் ஆயுள்இரண்டுபரார்த்தம். நூறு என்பது பொருள்.

" பிரஹ்மணோபியமத்த: துவிபராத்த பராயுஷ: " (பாகவதம்)நூறு ஆயுள்உள்ள நான்முகனுக்கும் காலரூகிய என்னிடத்தில்அச்சமுண்டாகிறதுஎன்று பாகவதத்தில் பகவான் கூறுகின்றார். இழுக்கும் தள்ளும் என்னும் சக்தியினால் உலகத்தில் உள்ள பொருள்கள்

சுழன்றுகொண்டேயிருக்கின்றன. துரும்பிலிருந்து சிருஷ்டிகர்த்தாவரை சகலமும் ஓடிக்கொண்டேயிருக்கின்றன.



நிலையில்லாத சிருஷ்டிகள் அனைத்தும் நிலையுள்ள பிரஹ்மத்தில் எவ்வாறு உண்டாகக்கூடும் எனின், இது அனாதியான கேள்வி. இதற்குப் பதிலாக "மாதரிஸ்வா" மாதரி-பிரமாதரி-அவித்யாவிசிஷ்ட ஆத்மா: அவித்தையால் ஆத்மா பிரமாதாவாக ஆகின்றது. எல்லா ஜீவர்களுடைய சம்ஸ்காரம் யாரிடத்தில் இருக்கிறதோ அந்த சூத்திராத்மா மாதரிஸ்வா எனப் படுகிறது. எவ்வாறு சூத்திரத்தில் அநந்தமணிகள் கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ அதுபோல யாரிடத்தில் அநந்தகோடி பிரமாண்டமும் அனந்தகோடி உயிரினங்களும் தோன்றி யொடுங்குகின்றனவோ அவர் சூத்திராத்மா எனப்படுவர். கர்மசம்ஸ்காரமும் அபிமானத்தோடுகூடிய சிதாபாசனுமான அவனே சமஷ்டிரூபமாகிச் சூத்திராத்மாவாகின்றான். நிருபாதிக ஆத்மாவிடத்தில் அந்த சௌபாதிக சூத்திராத்மா அபோர்த்தாதி — காரணரூப ஜகத்பீஜத்தை விதைக்கின்றார். உயிர்களுக்குக் கர்மபலத்தைக் கொடுக்கிறார் என்பது பொருள்.

பொ-உ. பரமார்த்தத்தில் அசலமாயும், ஏகமாயும், மனதிற்கு அப்பாலாயும், பொறிகளால் அடைய முடியாதாயும், எல்லாவற்றிற்கும் முன்னே சென்றதாயும், வேகமாய்ச் செல்லுகின்ற அனைத்தையும், தாண்டுவதாயும், சுவயம் ஸ்திரமாயும். அவித்தை

யால் சூத்திராத்மாவாயும், ஆத்மா காரணபீஜத்தைத் தரிக்கின்றது.

5-வது மந்திரத்தின் அவதாரிகை.

எப்படி விதையிலிருந்து மரம், மரத்திலிருந்து விதையென்பது அனாதி பரம்பரையோ, அப்படி சிருஷ்டியில் கர்மமும், கர்மத்தினால் வாசனையும், வாசனையால் சிருஷ்டியும், சிருஷ்டிக்குப்பின் பிரளயமும் அனாதியாக வந்துகொண்டிருக்கிறது. எந்த விதை நெருப்பில் இட்டு எரித்தாகிவிட்டதோ, அந்த விதை மீண்டுமுண்டாவதற்குக் காரணமில்லை. அதுபோல எந்த அந்தக்கரணத்தில் பிரஹ்மாகார விருத்தி யுதயமாகின்றதோ, அந்த அந்தக்கரணம் சாம்பராகிவிட்டது. ஆகையால் அதனுடைய ஜன்ம பரம்பரை முடிந்துவிட்டது. அவ்வாறு ஒப்புக்கொள்ளாது போனால் ஞானத்திற்குப் பிரயோஜனமின்றிப்போகும். பிறகு உலகில் யாரும் முக்தராகமுடியாது. ஆதலின் யாருக்கு பிரஹ்மஞானமுண்டாகிவிட்டதோ, அவர்களுக்குப் புனர்ஜன்மமில்லையென்பது சுருதிப் பொருள். சிலர் ஞானமில்லாமலே, விவாகாதி செய்யாமலும், சந்தானமுத்பத்திப் பண்ணாமலும், இருக்கிறார்கள். ஆனால் உடலின் வியர்வையால் எத்தனைக் கீடாணுக்கள் உண்டாகின்றன என்பது அவர்களுக்குத் தெரிகிறதில்லை. ஞானம்வந்தால் ஒழிய ஜன்மம் நீங்காது. "ஞானத்தழல் சுட்டுவெண்ணீருக்கும்" என்பது கைவல்யம்.

நான்காவது மந்திரத்தில் காரியகாரண சஹித பரமாத்மாவை வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இந்த

மந்திரத்தில் காரியகாரணரஹித ஆத்மாவை வர்ணிக்கப்படுகிறது.

5–வது மந்திரம்.

ததேஜதி தன்னைஜதிதத்தூரே தத்வந்திகே|
ததந்தரஸ்ய சர்வஸ்ய ததுசர்வஸ்யஅஸ்யபாஹ்யத: ||

ப–உ. தத் = அந்த (ஆத்மா) ஏஜதி = செல்லுகிறது. தத்நஏஜதி = அந்த (ஆத்மா) செல்லுகிறதில்லை. தத்தூரே = அது தூரமாகுவுமிருக்கிறது. தத்உ அந்திகே = அது அண்மையிலுமிருக்கிறது. தத்ஸர்வஸ்ய அந்தரஸ்ய = எல்லோருடைய உள்ளிலும், ஸர்வஸ்ய அஸ்யபாகியத: = அந்த ஆத்மா எல்லாவற்றின் வெளியிலும் இருக்கிறது.

வி–உ. "தஸ்மின்அபோ மாதரிஸ்வா ததாதி" இதுபீஜவிசிஷ்டசேதனம் காரணப்பிரஹ்மம். அல்லது மாயாவிசிஷ்ட ஈசுவரன். ததேஜதி–இது மாதரிஸ்வா. உபாதிவசத்தால் செல்லுந்தன்மையுடையது. "தத்நஏஜதி" ஆத்மா நிர்விசேஷத்தத்வம். பிரஹ்மம் என்பதுபொருள். இவ்விடத்தில் சுருதிஇரண்டையும் அபேதப்படுத்துகிறது. "ஏஜ்ரு-(கம்பனே"என்னும் வினைப் பகுதி) இதற்கு அர்த்தம்-அசைவது. அசைவது இருவிதம். ஒருதேசத்திலிருந்து இன்னொருதேசத்திற்குச் செல்வது. மற்றொன்று தீபத்தின்தன்மைபோல இருந்தவிடத்தில் இருந்தே சென்றுகொண்டிருப்பது. இங்கு செல்வதற்கு அர்த்தம் மாறுபடுதல் என்பது பொருள். மாதரிஸ்வா— தூரம் சென்று அபோதானம் செய்வதன்று–அவருடைய சங்கல்பத்தில் சிருஷ்டியுண்டாகிறது. ஏஜதிகாலம், நஏஜதிகாலம், பரிணாமகாலம்,

விவர்த்தகாலம்என்பது பொருள். இரண்டுகாலத்திலே யும் ஆத்மா ஒருபடித்தாகவேயிருக்கிறது. உபாதிசகி தம், உபாதிரகிதமென்பது கருத்து. சவிசேஷமும் பர மார்த்தத்தில் மித்தையேயாம். "சுவபாவாதிகரணே" அத்யந்தாபாவத்வம் மித்யாத்வம்என்பது இலக்கணம் (தன்னுடைய அதிகரணத்தில் தனது அபாவத்வம்) பாம்பினுடைய, அதிகரணத்தில் 'கயிற்றில், பாம்பி னுடைய அபாவத்வம். சர்ப்பமில்லாதிருத்தல் மித்யாத் வமாகும். தத்பிரஹ்மம் இது காலகிரமத்திலிருந்து விலக்ஷணம்.

பிரஹ்மத்தில் இரவு பகல், சிருஷ்டி பிரளயம், காலம் இவையெல்லாம் அபின்னமாம். ஆத்மா, காலத் தால் அபரிச்சின்னமாகும். தத்தூரே தத்அந்திகே— இதனுல் தேச பரிச்சேதமற்றது ஆத்மா. அபரிச்சின்ன ஆத்மாவில் பரிச்சின்னம் அத்யஸ்தம். காலம் கற் பிதம். அத்யஸ்தம் அதிஷ்டானத்திற்கு வேறன்று. தேசமென்பது எது? நம்முடைய நீளம், விஸ்தாரம், உயரம், அகலமுதலிய விசாரஜன்ய ஞானத்திற்கு எது விஷயமோ அது தேசமெனப்படும். தேகத்தின் அபிமான காரணமாக நீளம், உயரம், அகலம், வடக் குத் தெற்கு கிழக்கு மேற்கு முதலிய வியவகாரமுண் டாகிறது. ஆத்மவிசாரம் பண்ணும்போது தேகாபி மானத்தை விட்டு விசாரிக்கவேண்டும், தேகத்தை முற்றிலும் விட்டுவிடவேண்டுமென்பது என்னுடையக் கருத்தன்று வியவகாரத்தில் உணவு, உடை, படுக்கை, நடத்தல் ஆதியெல்லாம் செய்யட்டும். ஆனுல் ஆத்ம

விசாரஞ் செய்யும்போது தேகாத்யாசத்தை விட வேண்டும். தேகதிருட்டியை விட்டு ஆத்மவிசாரஞ் செய்யவேண்டுவதுதான் உசிதம். ஈசுவர திருஷ்டி யோடு நமது திருஷ்டியை வைக்கவேண்டும். ஈசுவர னுக்கு கிழக்கு மேற்கு முதலிய தேசமோ, உயரம், அகலம் முதலிய இடமோ கிடையாது. ஆத்மாவில் திருஷ்டிவைத்த உடனே தேசம், இடம், காலமெல் லாம் அற்றுவிடுகின்றன. அப்போது மேற்கதி (சுவர்க லோகம்)அதோகதி (நரகலோகம்) திரியக்கதி(விலங்கு யோனிகள்) இவையெல்லாம் தவிடுபொடியாக நொறுங்குகின்றன.

மேற்கூறிய கதிகள் எல்லாம் தேகதிருஷ்டியால் வந்ததேயல்லாமல் ஆத்ம திருஷ்டியால் வந்ததன்று. தூரம் சமீபம் அந்தக்கரணத்தின் உபாதியால் வந்தது. "அபூர்வம் அனபரம் அனந்தரம் அபாகியம் ஏஷ சர்வானுபூ: இத்யநுசாசனம்" என்று சுருதி கூறுகிறது. அபூர்வம்=காரியமற்றது. அனபரம் = காரணமற்றது. அனந்தரம்=விஷயமற்றது. அபாகியம்=விருத்தியற் றது. ஆதியில் இதுதான்—இந்த ஆத்மாவே சர்வ அநுபவரூபமாக விளங்கிக்கொண்டிருக்கிறது. தூரம் சமீபம் இவையிரண்டும் ஆகாரம், ஆத்மா நிராகாரம், ஜகத்காரணம் ஜடமன்று சேதனமாகும். பண்டிதராஜ ஜகன்நாதர்

நிருபாதானசம்ரம்மே அபித்தாவேவ தன்வதே |
ஜகச்சித்ரம் நமஸ்தஸ்மை கலாஸ்லாக்யாய சூலினே:

என்று கூறுகின்றார். எந்தவித காரணமும் இல்லா மலே சுவரில்லாமல் சித்திரம் வரைவதுபோல எவன்

ஒருவன் இந்த உலகரூபபடத்தை வரைந்திருக்கிறுனே அந்தப் புகழ்பெற்ற கலாகார சிவனுக்கு வணக்கம் என்பது பொருள். "சூன்யபித்திபர்சித்ரரங்குநஹி" "தனுவினுலிக்காசித்தேரே" துளசிதாசர். சுவரில்லா மலும், நிறமில்லாமலும் உடல் இல்லாமலும் உலகத்தை வரைகின்றுர் என்பது பொருள். "ததந்தரஸ்ய ஸர்வஸ்ய அஸ்யபாகியத: எல்லோருடைய உள்ளிலும் அந்தக்கரணரூபமாகவும், வெளியில் காரியரூபமாகவும் ஆத்மாவே விளங்குகிறது. வெளிப்படுத்துவதும் அதுதான். இங்கு வஸ்துகத பரிச்சேதம் நிவாரணம் பண்ணப்படுகிறது. அந்தர் = உள்ளே. காரணம். பாகியம் = வெளி. இது காரிய அவஸ்தை. காரணம்—கரணம்—மனம் புத்தி, பொறிகள் முதலிய கருவிகள் எங்கிருந்துதோன்றி யெதில்ஒடுங்குகின்றனவோ அது காரணமெனப்படும். ஆத்மா மண்ணுகவும் கடமாகவுமிருக்கிறது, ஆகையால் அதுவே காரணமாகும்."மதிபரிதியெரிநீர்காலவானவனி" (சசிவன்னபோதம்.) என்பது பிரமாணம்.

பொ—உ. காலம், தேசம், விஷய முதலிய திருஷ்டியால் இந்த மந்திரத்தில் மேற்கூறிய விஷயங்கள் அற்றதும், உள்ளிலும் வெளியிலும் நிறைந்ததாயும், காரணகாரியரூபமாகியும், அவைகளின்றியதாயும், வியக்தவியஞ்ஜக ரூபமாயும் விளங்கிக்கொண்டிருப்பது ஆத்மாவாகும்.

6-வது மந்திரத்தின் அவதாரிகை.

யஸ்து சர்வாணி பூதானி ஆத்மன் யேவானு பஶ்யதி |
சர்வபூதேஷு சாத்மானம் ததோநவிஜுகுப்சதே ||

ப-உ. யஸ்து = எவனொருவன், சர்வாணி பூதானி=எல்லா பூதங்களையும், ஆத்மனிஏவ=ஆத்மாவின்கண்ணே. அனுபஸ்யதி=அநுதினம் பார்க்கிறனே, ஆத்மானம் = ஆத்மாவை, சர்வபூதேஷு= எல்லாப் பூதங்களிடத்திலும் பார்க்கிறனே. அவன் ததோ = அதனல் நவிஜுகுப்ஸதே = யாரையும் வெறுக்கிறதில்லை,

வி-உ. 'யஸ்து சர்வாணி பூதானி' உபாதியும் உபாதியோடு கூடிய பொருளையும், ஆத்மனிஏவ = தன்னிடத்திலேயே-'அனுபஸ்யதி' எவன் பார்க்கிறனே, அவன்தான் 'பஸ்யதி' பார்க்கிறன். கண்உள்ளவன் என்பது கருத்து. தன்னைப் பரமாத்மாவாக அறிகிறன். இந்த ஆத்மா எது? எதை யீஸாவாஸ்யம் என்று கூறியிருக்கிறதோ அந்த ஈசுவரன்தான் ஆத்மா. ஆகையால் இரண்டுமொன்று என்பது தெளிவு. அதிஷ்டானத்தில் அத்யஸ்தம், சாக்ஷியில் சாக்ஷியம், பிரகாஸத்தில் பிரகாஸ்யம்இவையெல்லாம் ஔபாதிகமாம். ஆத்மாவில் அதிகரண அதிகார்ய பாவமின்று. இந்தமாதிரி எவன் அறிகிறனே அவன் தான் 'பஸ்யதி' தன்னையுள்ளபடி அபரோக்ஷமாக 'அனு ஸ்யதி' அனுபவிக்கிறன்.

திருஷ்டாவில் திருஷ்யம் உள்ளபடி யில்லவே யில்லை. திருஷ்டா, அபரிச்சின்ன, சர்வஅவபாசக ஆத்மாவாக இருக்கிறது, "நவிஜுகுப்ஸதே" எந்த வஸ்துவோடும், எந்த எண்ணத்தோடும், யாரோடும், க்ருணை, கருணைக்கெதிர்மறை. இகழ்வதில்லையென்பது பொருள். இருந்தாலும், நன்மையிலும்தீமையிலும்,

இகழ்வோ அல்லது புகழ்வோ செய்வதில்லை. க்ருணு சித்தத்தின் பலஹீனம். இது நமது பொருமையை யெடுத்துக்காட்டுகிறது. 'கிரு' என்னு வினைப்பகுதியி லிருந்து க்ருணு என்னும் சப்தந்தோன்றியிருக்கிறது. சித்தத்தில் (சந்தாபம்) கவலைவந்தால் தாங்கமுடியா மல் க்ருணு உண்டாகிறது. இது விஷயமாக ஒரு இதி ஹாசம் உளது.

மகாராஷ்டரத்தில் ஒரு சம்பவம். அங்கு வசிக்கும் சாதுக்கள் அனைவரும் ஒன்றுகூடி நமது குழுவில் யார்உறுதியான சாது என பார்க்கவேண்டுமென்று ஆலோசனை செய்தார்கள். இவர்கள் எல்லோரும் தங் கள் குருசந்நிதியில் குழுமியிருக்க, அங்கு ஞானேசுவரி யென்னும் ஒரு மாது கரத்தில் தடியுடன் வந்து இவர் களில் உத்தம சாதுக்கள் யார்என்று பார்க்கவேண்டும் என்று அவர்கள்தலையில் ஒவ்வொரு அடியடிக்க, அவர்கள் எல்லோரும் உம்என்று உறுமிப்பார்க்க, பின்பு அந்தஅம்மையார் தன் குருதலையிலும் அவ்வாறு அடிக்க, அவர் மௌனமாயிருக்க, இவர்களில் நமது குருநாதரே உத்தம சாதுவென்று வணங்கிச்சென்ருள். தாத்பரியம் என்னவென்ருல் ஞானம் வந்தபிறகு சித்த துர்பலம், க்ருணு வருவதன்று.

ததோ நவிஜுகுப்ஸதே—இதன்படி ஞானம் வந்த பிறகு சந்தேஹம் வராதென்பது பொருள். விசி கித்சா = சந்தேஹம், "யஸ்மின் விஞ்ஞாதே சர்வம் விஞ்ஞாதம் பவதி" (அதை) ஆத்மாவை தெரிந்த பின்னர் எல்லாம் தெரிந்ததாகின்றது. இந்த ஞானத் தைப்போன்று வேறு ஒரு ஞானமுமன்று. இந்த அனு

டியமாதிரி வேறு அனுபவமும் இன்று. இது சம்பந்த மாக ஒரு கதை — பகவான் ஸ்ரீ சங்கரர் ஒருமுறை தனது பாரியை உமையோடு காளைவாகனத்தின்மீது ஏறிக்கொண்டு வனத்திற்குச் சென்றார். வழியில் சனகாதி முனிவர்களைக் கண்டார் சிவபெருமான். அவர்களும் உமையோடு சிவனைக்கண்டார்கள் கண்டும் எவ்வுலகத்திற்கும் தலைவனை சிவபெரு மானை வணங்காமல் அவர்க்கு அவமானஞ் செய்து விட்டார்கள் என்று கருதி அவர்களை நோக்கி — ஹே சனகாதிகளே! நீங்கள் எல்லாம்வல்ல இறைவனை அவமானஞ் செய்ததால் ஒட்டகையாகப் பிறக்கக் கடவீர்கள் என்று உமையம்மை சாபமிட்டாள். அவர்கள் ஒட்டகையாகிவிட்டார்கள். சிறிதுகாலம் கழிந்தபின்பு மீண்டும் உமாநாதன், உமையைக் கூட்டிக்கொண்டு அவ்வனத்திற்குச் சென்றனர். அங்கு சனகாதிகள் ஒட்டகையாகிநிற்கின்ற நிலையைக் கண்டு ஸ்ரீ சங்கரன் கேட்க ஆரம்பித்தார்—ஹே சன காதிகளே உங்கள் நிலை யென்னவென்று வினவ. அவர்கள் எல்லாமறிந்த இறைவா! திருமாலின் மைத் துனரே! திருமகள் சகோதரரே! சிவகாமி வல்லபரே! உமக்குத் தெரியாதது என்ன இருக்கிறது. அன்னைஎப் போதும் கருணைசாகரியல்லவா, அடிப்பதும் அன்னை, அணைப்பதுமன்னைதானே, அவள் எங்களுக்கு க்ருபை செய்தாள். முன்னர் எங்களுக்குப் பல தொழில்கள் இருந்தன. அதிகாலையில் எழுந்திருப்பது, ஸ்நானம், சந்தியாவந்தனம், பிக்ஷையேற்று உண்பதுமுதலியன. இப்பொழுது இரண்டு வேலைதான் இருக்கிறது. முள்ளைக் கடிப்பதும் மலங்கழிப்பதும். வேறு எந்த

வேலையுங்கிடையாது. அன்னையின் கிருபையால் ஆனந்தமாக வாழ்கிறோம் என்றார்கள். இதையறிந்த சிவபெருமான், உவகையுற்று உமைக்கு சாபத்தை மாற்ற ஆணையிட்டார். உமையும் தனது சாபத்தை மாற்றினாள். சனகாதிகள் மீண்டும் முந்திய நிலையை பெற்றார்கள். ஞானம் வந்தபிறகு ஞானிக்கு இன்பமுமில்லை துன்பமும் இல்லையென்பது துணிபு. "ஞானிக்கில்லை யின்பமுந்துன்பமும் என்பது ஆன்றோர்வாக்கு. இதைத்தான் ஏழாவது மந்திரத்திலும் கூறப்போகின்றது.

பொ-உ. எவன் எல்லாவுயிர்களையும் தன்னிடத்திலேயும் தன்னை ஏனைய உயிர்களிடத்திலும் பார்க்கிறானோ அவன் எதையும் கண்டு இகழ்வதில்லை. அவனை=அம்மகானை வேறு எவ்வுயிர்களும் வெறுக்கிறதில்லை.

## 7-வது மந்திரத்தின் அவதாரிகை.

ஞானியாகிய புருஷன் எல்லாவுயிர்களையும் தன்னுயிராகப் பார்க்கிறான். ஆகையால் எல்லாம் அவனாகின்றான்.

## 7-வது மந்திரம்.

யஸ்மின் சர்வாணிபூதானி ஆத்மைவாபூத்விஜானத:
தத்ர கோ மோஹ: க: ஸோக: ஏகத்வம் அனுபஸ்யத: |.

ப-உ. யஸ்மின் = எந்த ஆத்மாவில், சர்வாணிபூதானி = எல்லாப் பூதங்களும். ஆத்மாவாகவே. அபூத் = இருக்கின்றன என்று, விஜானத: = அறிகின்றானோ. தத்ர = அவ்விடத்தில், அல்லது அப்பொழுது,

மோஹ: க: சோகக: - மோஹம் என்பது எவ்வாறு பொருந்தும். சோகம்தான் எவ்வாறு வரக்கூடும். ஏகத்வம் அனுபஸ்யத: = எல்லாவற்றையும்ஒன்ருகப் பார்ப்பவனுக்கு என்பது பொருள். ஞானிக்கு சோகமும் மோகமும் வாராதென்பது துணிபு.

வி–உ. விஜானத:, ஏ க த் வ ம் அனுபஸ்யத:, யஸ்மின் சர்வாணிபூதானி ஆத்மாஏவ அபூத் என்று அன்வயம் பண்ணிக்கொள்ளவேண்டும், எல்லாவுயிரினங்களும் ஆத்மாவில் ஒடுங்கிவிட்டது என்று கூறவில்லை. ஆத்மா சகல ஸ்தாவர ஜங்கமங்களாகிவிட்டதென்றும் கூறவில்லை. ஏனெனின், ஆத்மா சகல வடிவமாக முன்னமேயிருக்கிறது. ஆ ஞ ல் இந்த ஞானம் இதுவரை உண்டாகாமல் இருந்தது. இப்பொழுது உண்டாகிவிட்டது. "விஜானத" பகிரங்க அந்தரங்க தர்மானுஷ்டானத்தால் சுத்த அந்த கரண அதிகாரி, சி ர வ ண ம ன ன நி தி த் யா ச ன ம் செய்து சொரூப ஞானத்தை அடைந்திருக்கிருன். மேற்கூறிய பகிரங்க அந்தரங்க சாதனங்கள் நான்குவிதமாக இருக்கின்றன, பகிரங்கம்=வெளியே, அந்தரங்கம்= உள்ளே. வெளிப்படையான பிரவிருத்திரூப தர்மம் கிருஹஸ்தர்களுக்கும், வெளிப்படையான நிவிருத்தி ரூப தர்மம் சந்யாசிகளுக்கும் ஆகும்: அந்தரங்க ப்ரவிருத்திரூப தர்மம் உபாசனை, அந்தரங்க நிவர்த்திரூப தர்மம் யோகம் எனப்படும். இந்நான்கும் மனச்சுத்திக்கு சாதனமாகும். சந்யாசம் ராகத்வேஷத்தை நீக்குகின்றது. யோகம் மனோராஜ்யத்தைப் போக்குகின்றது.

சந்யாசம் போகத்தையும். மோஹத்தையும் நாசஞ்செய்கின்றது. உபாசனை விட்சேபத்தை விலக்குகின்றது. அந்தரங்கசாதனம். சிரவணம், மனனம், நிதித்யாசனம் இவைகள் தத்வம் பதார்த்தத்தை சோதனைசெய்கின்றது. இந்தச்சோதனை ஜபம், தபம், தியானம் இவைகளால் உண்டாகிறதில்லை.

மௌனம், விரதம், சாஸ்திரசிரவணம், தபம், வேத அத்யயனம், ஸ்வதர்மபாலனம். பிரவசனம், தனித்துவாழ்வது. ஜபம், சமாதி மற்றும் சாதனங்கள் மோக்ஷத்தைக் கொடுக்கும். ஆனால் யாருக்கு? இந்திரியங்கள் யாருக்கு அடங்கியிருக்கின்றனவோ அவர்களுக்குத்தான் கொடுக்கும், எவர்கள் புலன்களையும், பொறிகளையும். அடக்கவில்லையோ அவர்களுக்கு மேற்கூறிய சாதனங்கள் வாழ்க்கைக்கு உதவுமேயல்லாமல் மோக்ஷத்தை தரமாட்டா, என்று பாகவதத்தில் பகவான் கூறுகின்றார். ஆகையால் ஞானம் பரிவர்த்தனம் ஆகவேண்டுமானால் சிரவணம் சத்சங்கம், தத்துவம் பதார்த்த சோதனம் அவசியம் வேண்டும்,

கயற்றில் காணப்படுகின்ற பூமியின் பிளவு. தடி, மாலை, பாம்பு முதலியவைகளால் வரும் துன்பத்தை கயறு எவ்வாறு சகித்துக்கொள்கிறதோ அதுபோல தனதிடத்தில் அத்யஸ்த சம்சார துன்பங்களை பொறுத்துக்கொள்பவன் சாது, அவனே ஞானி. அவனோடு சங்கம் அவசியம் செய்யவேண்டும். வாசனானுசாரம் சரீரம்கூட நடக்கமாட்டாது. பிறகு மனம், புத்தி இவையெல்லாம் எப்படி நடக்கும். ஒருவரிடம் ஒரு வார்த்தையை சொல்லக்கூடாதென்று நினைக்கிறோம். சிறிது

நாள் கழிந்ததும் மறந்து சொல்லிவிடுகிறோம். எதைச் செய்யக்கூடாதென்று நினைக்கிறோமோ அதைஅடுத்த கணத்தில் செய்துவிடுகிறோம் அல்லவா. இதனால் இந்திரியங்களும் வாசனைவசம் நடக்கவில்லையென்று தெரிகிறது.

அ என்பது ஒரு எழுத்து. அதை அ என்று ஒருவர் அறிவிக்காமல் தெரிந்துகொள்ளமுடியுமா? முடியாதல்லவா அதுபோல நாமமும் உருவமும் வெளிப்படையாக இருந்தாலும் நாமரூபஞானம் கேள்வியில்லாமல் எப்படி உண்டாகும்? உண்டாகமாட்டாது தானே. புளியக்காட்டினாலும் புளி ஞானமில்லாது போனால் புளியென்று அறியமுடியுமா முடியாதல்லவா புளியைத் தெரிந்தாலும் மரத்தின் ஞானமில்லாபோனால் புளி தெரியுமா. இவையெல்லாம் கேள்விஞானத்தால்தான் உண்டாகின்றன. பொருளைப்பற்றிய ஞானமிருந்தாலும்நாமத்தைப்பற்றியஞானமில்லாதுபோனால் பொருள் தெரியாது பொருளைக்காட்டினாலும் பெயர் தெரியாதுபோனால் எப்படிப் பொருள்விளங்கும். "உபதேசஆத்ய உச்சாரணம்" (பாணினிசூத்ரம்) பிரதம உச்சாரணத்தினால் பதார்த்த ஞானமுண்டாகிறது. நாமமும் உருவமும் எப்படி கற்பிதமோ அப்படி ஆத்மாவிடத்தில் பரிச்சின்னமும் கற்பிதமேயாம். இந்த பரிச்சின்னத்வம் விசாரம்பண்ணாததால் வந்தது. விசாரத்தால் அன்று.

"வினுஜானேகத்து மரத்துபியாசா
ஆனந்தசிந்து மத்யதனு வாஸா" (துளசிதாஸர்)

ஹே ஜீவனே! நீ ஆனந்தத்தின் நடுவில் வசிக்கிறாய்,

அவ்வாறிருந்தும் தன்னை அறியாததோஷத்தால் கவலைப்படுகின்றாய்என்பது மேற்கூறிய வாக்கியத்திற்குப் பொருள். அறியாமையால்வந்த பரிச்சின்னத்வம் அறிவால் நீங்குகின்றது. ஞானம்சிரவணத்தால் உண்டாகிறது. மனன நிதித்யாசனத்தால் சம்ஸயம் விபரியயம் நீங்குகின்றன. எந்தஞானத்தால் யாருக்கு எது நீங்கும் என்று குருவுக்குத்தான் தெரியும். எந்தமருந்து எந்த நோயாளிக்குப் பொருந்தும் என்பது வைத்தியர்க்குத்தானே தெரியும். பிரஹ்மஞானத்தை இந்திரிய ஞானம் கண்டிக்கமுடியாது. அனதிகத, அபாதித வஸ்துவை யெது விளக்குகின்றதோ அது ஸாஸ்த்ர மெனப்படும். அனதிகதம் = அறியப்படாததை, அபாதிதம் = அழியப்படாததை அறிவிப்பது ஸாஸ்த்ரம். சாஸ்த்ரத்திற்கு இரண்டு இலக்கணம் — "சாஸனாத் சாஸ்த்ரம்" என்பது ஒன்று. "சம்ஸனாத்சாஸ்த்ரம்" என்பது மற்றொன்று. விதிவிலக்குகளைப் போதிப்பது முதல் இலக்கனத்திற்குப் பொருள். உண்மைத் தத்துவத்தையறிவிப்பது இரண்டாவது இலக்கணத்திற்குப் பொருள், அறம், பொருள், இன்பம்என்னும் இம்மூன்று புருஷார்த்தங்களுடைய விதிவிலக்குகளையெடுத்துப் போதிக்கின்றது விதிசாஸ்த்ரம். அறத்தையிவ்வாறு செய், இவ்வாறு செய்யாதே. பொருளையிவ்வாறு தேட வேண்டும், அதிக இன்பத்தை யனுபவித்தால் துன்ப முண்டாகும். ஆகையால் அளவோடு அனுபவிக்க வேண்டுமென்றும். விதித்ததைச் செய்தால் (சுவர்க்க) இன்பமும், விலக்கியதைச் செய்தால் நரக துன்பமும் உண்டாகுமென்று விதிசாஸ்த்ரம் கூறுகின்றது.

இரண்டாவதுசாஸ்திர இலக்கணத்துக்குப்பொருள், உண்மை தத்துவமாகிய ஆத்மாவை போதிப்பதால் சம்ஸனம்சாஸ்திரமென்றுகூறப்பட்டிருக்கிறது. இந்த சாஸ்திரம் நேராக மோக்ஷப் புருஷார்த்தத்தை கூறுவதால் வேதாந்தம் எனப்படும். சம்ஸனம் = கூறுவது. தர்மமும் அதர்மமும் அதன் பலனாகிய இன்பதுன்பங்களும் பொறிகளுக்கு எட்டாததால் அவைகளை விளக்கும் சாஸ்திரம் விதிசாஸ்திரம் எனப்படும். மோக்ஷம் கிரியாபலம் அன்று. ஞானைகவேத்யம். ஞானத்தால் அறியப்படுவது என்பது பொருள். சாஸனம் ஆணை. சம்ஸனம்=சொல்லுதல். அகக்கரணம் = மனம், புத்தி. புறக்கரணம்=கண் முதலியவை. இவைகளுக்கு எட்டாத சுத்தபிரம்மத்தை தரிசிப்பதற்குச் சாதனம் சிரவணம். மகாவாக்ய சிரவணத்தால் ஞானம் உதயமாகின்றது. உண்டான ஞானத்தில் சம்சயவிபரியயம் இருக்குமானல் மனனநிதித்யாசனம்செய்யவேண்டும். கேட்ட பொருள்ளாகிய பிரம்மத்தில் சித்தத்தை நிலை நிறுத்துவது நிதித்யாசனம். சிரவணம் செய்தபின்பு மனனம்பண்ணி அதன்பிறகு நிதித்யாசனம் பண்ணுவது வேதாந்தத்தின் முறையாம். சிரவணம் செய்து மனனம்செய்யாமலே நிதித்யாசனம்பண்ணினுல் அது உபாசனை எனப்படும். நமக்கு நம்பிக்கையான ஒருவன் நம்மிடத்தில் சம்சாரம் பொய்யென்றும் ஆத்மா மெய்யென்றும்கூறினன். நமக்கு நம்பிக்கை வந்துவிட்டது. சம்சாரம் பொய் ஆத்மா மெய்யென்று தெரிந்து விட்டது. இது சிரத்தையாகும். ஆனல் வேதாந்தவழி இதற்குவேறு. சிரத்தையும் வேறுவழி. நம்பிக்கை மனிதனைப்பற்றி இருக்கிறது, வேதாந்தம் ஞானத்தைப்

பற்றி இருக்கிறது. "விஜானத:" இவ்வாறு அந்தரங்க பஹிரங்க சாதனங்கள் மூலமாக அந்தக் கரணத்தைச் சுத்தம்செய்து சுத்தமனதால் சிரவணம் செய்யும்போது ஞானம் உண்டாகிறது. அப்போது அவன் அறிந்தவ ஞக ஆகின்ருன். "விஜானத" விவிச்சியஜாஞதி = உலகத்திற்கு விபரீதமாகஅறிகிருன். ஆகையால்விஜா னதஎன்று கூறியிருக்கிறது. உலகம் பாமரமக்கள். தன்னையும் தனக்கு ஆதாரத்தலைவனையும் வேருகஅறி கின்ருர்கள். காட்சியை சாட்சிக்கு அன்னியமாக அறி கிருர்கள். ஞானிஅவ்வாறன்று. ஞானி அறிபவனையும், அறிபடும் பொருளையும் அறிவு சொரூபமாகப் பார்க்கி ருன். அந்த அறிஞன் 'விஜானன்' என்று சொல்லப் படுகிருன். "ஏகத்வம்" அனுபச்யத:" உள்ளே இருக் கும் சைதன்யமும் வெளியே இருக்கும் சைதன்யமும் ஒன்று என்று அறிகிருன். தேகத்தை நடத்துபவன் ஜகத்தை[illegible]ம் நடத்துகின்ருன். "யஸ்மின்" விருத்தி வியாப்திகாலத்தில், அதாவது மகாவாக்ய சிரவணம் பண்ணிஞானம்உதயமானகாலத்தில்என்பதுபொருள். ஞானி, திருச்யத்தை பொய்யென்றும் ஈசுவரனை தனக்கு அபின்னமென்றும் அறிகிருன். சத்தையிலி ருந்து வடிவம் வேறுஅன்று. சத்தை ஆத்மா. திருஸ் யம் திருக்குக்கு வேறன்று, ஞேயம் ஞானத்திற்கு அன் னியமில்லை, ஆனந்தத்திற்கு அன்னியமாக விருப்பு இல்லை. "அபூத்" = அனுபவதி. ஞானி இவ்வாறுஅனு பவிக்கிருன் என்பது பொருள். "ஆத்மாயேவஅபூத்" ஆத்மா எல்லாரூபமாய் இருக்கிறது என்பது கருத்து. அஞ்ஞானகாலத்தில் இவ்வாறு அறிகிறதில்லை. ஞான காலத்தில் இவ்வண்ணம் அறிகிருன் உணருகிருன்.

"ஏகத்வம் அனுபஸ்யத:" விவகாரகாலத்தில் அறிகிருன். சமாதிகாலத்தில் அன்று. ஏனெனில் சமாதியில் சோகமோகம் அன்று. முஹ-வைசித்ரியே என்னும் விஜனப்பகுதி. இதற்குப்பொருள். சித்தத்தை விபரீதநிலைக்குக் கொண்டுசெல்வதாம். நாம் அல்லாததை நாம் என்றும், நமது அல்லாததை நமதுஎன்றும் எண்ணுவது மோகமாம். மோகம், சோகம், பயம். இம்மூன்றும் மூன்றுகாலத்தில் வருகின்றன. மோகம் நிகழ்காலத்திலும், சோகம் இறந்தகாலத்திலும், பயம் வர்த்தமானகாலத்திலும் வருகின்றன. மோகம் நம்மிடத்தில் இருக்கின்ற பொருள் நம்மைவிட்டு நீங்கக்கூடாது.நம்முடைய பெண்டுபிள்ளைகள் நமது உடைமைகள் நம்மைவிட்டு விலகக்கூடாது என்று நினைப்பது மோகமாம். இது நிகழ்காலத்தில் உண்டாகும்தன்மை.சோகம் நம்மிடத்தில் இவ்வளவு பொருள் இருந்ததே, இப்பொழுது ஒன்றும் இல்லையே. நமக்கு இவ்வளவு உற்ருர் உறவினர் இருந்தார்களே. அவர்களில் ஒருவரும் இன்றில்லையே என்று கவலைப்படுவது சோகமாம். பயம். இப்பொழுது இருக்கின்றவர்களும், இப்பொழுது இருக்கின்ற பொருள்களும் இனிமேல் இல்லாவிட்டால் நாம் எப்படி வாழ்வது என்று அஞ்சுவது பயமாம். இவைஅனைத்தும், எல்லாம் நமது சொரூபமே என்று நினைக்கின்றஅறிஞனுக்கு உண்டாகிறதுஇல்லை. அதாவது ஞானிக்கு' இந்த சோகமும் மோகமும் உண்டாகமாட்டா. நாமரூபத்தில் ஞானிக்கு ஆசக்தி இருக்கிறதில்லை. ஞானிக்கு ஜீவன மரணம் இறண்டும் ஒன்றுபோலவே தோற்றும். வேதாந்தத்தில் விசாரஜன்ய ஞானத்திற்குத்தான் மகத்வமுண்டு, நிகழ்காலத்தை

எதிர்காலத்திற்கு இழுத்துச்செல்லும் தன்மைக்கு மோகம் என்று பெயர். நாம் கிழப்பருவம் அடையக் கூடாது நமது சரீரம் நோய்வாய்படக்கூடாது, நமது மக்கள், நமது சொந்த ஜனம் நம்மைவிட்டு நீங்கக் கூடாது, எந்ததீங்கும் உண்டாகக்கூடாதென்று எண்ணும் எண்ணமே மோகத்தின் மகிமையாம். உடலிலும் உடைமையிலும் மோகம்உண்டாகும். சென்றதை நினைக்கும்போது சோகம் உண்டாகும். தத்வதரிசிக்கு மூன்று காலத்தைப்பற்றியும் கவலையில்லை. ஆகையால் அவனுக்குச் சோகமுமில்லை, பயமுமில்லை. ஞானி நிகழ்காலத்தை ஆனந்தமாக ஆக்கிக்கொள்கின்றான்.

சென்றது கருதார்நாளைச் சேர்வதுநினையார் கண்முன்
நின்றதுபுசிப்பார்வெய்யினிலவாய்விண்விழுதுவீழ்ந்து
பொன்றினசவம் வாழ்ந்தாலும் புதுமையா வொன்றும்
பாரார்
நன்றுதீதென்னார் சாட்சி நடுவான சீவன்முத்தர்.
(கைவல்யம்)

இதன் பொருள்—சென்றது கருதார் = போனதைப் பற்றி நினையார்கள், நாளைச்சேர்வது நினையார் = வருங் காலத்தில் இனி வாரா நிற்பதைப்பற்றியும் நினையார்கள். கண்முன் நின்றது புசிப்பார் = கண்முன்னே நிற்கின்ற போகங்களைப்புசிப்பர்கள். வெய்யில்நிலவாய் = சூரியகிரணமான வெய்யிலானது சந்திரகிரணமான நிலவைப்போலச் சீதளமாகி. விண்விழுது வீழ்ந்து = ஆகாசத்தினின்றும் விழுதுகள் இரங்கி பொன்றின சவம் வாழ்ந்தாலும் = மரித்துப்போன பிரேதம் பின் ஜீவித்ததானாலும். புதுமையா ஒன்றும் பாரார் = ஆச்

சரியமாக வொன்றையும் நாடார்கள். நன்றுதீது என்னுர் = நன்றென்றும் தீதென்றும் சொல்லார்கள். சாட்சி நடுவான = சாட்சியாய் நடுவான சீவன்முத்தர். சீவன் முத்தர்கள். எ—று.

பவிஷ்யன் நானுசந்தத்தே நாதீதம் சிந்தயத்ய சௌ |
வர்த்தமான நிமேஷந்து ஹசன்ஏவாதி வர்த்ததே ||

இ—ள். மஹான்கள் எதிர்காலத்தைச் சிந்திப்பதில்லை. நாளை யென்னவரும் என்பதை யெண்ணுவதுமில்லை, இறந்தகாலத்தில் என்ன நடந்தது என்று நினையார்கள். ஆனல் ஞானிகள் நிகழ்காலத்தைமட்டும் இன்பமாகக் கழிப்பார்கள். "பஸ்யத:" என்னுஞ்சொல் லுக்குப்பொருள் அனுபவிப்பவன் என்பதாம். பாவனை யென்பது புருஷதந்திரம். செய்யவும் செய்யாமலும் இருக்கக்கூடும். மாறுபட்டுச் செய்யவும்முடியும். தத்வ தரிசனம் அவ்வாறன்று. தத்வம் பிரமாதாவுக்கு அதீனமன்று பின்னை ஞேயத்திற்கு அதீனமாம். பாவனையால் நாம் சாளகிராமத்தை விஷ்ணு, கிருஷ்ணன், ராமன் முதலிய தேவதையாகவும்பாவிக்கலாம். பாவிக்காமல் இருக்கவும் செய்யலாம். வஸ்து (ஆத்மா) அவ்வாறன்று, ஞானம் உள்ளதை உள்ளவாறு உணர்த்தும். கல்லைக் கல்லென்றும், கட்டையைக் கட்டையென்றும் அறிவிக்கும். வஸ்துவில் பரிவர்த்தனம் உண்டாகாது. மாறுதல் வடிவத்தில்தான் உண்டாகிறது, குயவன் முயற்சியால் மண்ணில் மாறுபாடில்லை. குடமுதலிய வடிவமட்டும் மாறுகின்றது. செம்பை சிவனுக எண்ணினதால்செம்பில் ஒரு மாற்றமுங்கிடையாது. எண்ணமாறலாம் திரவியம்மாருது. பொற்கொல்

லன் சங்கற்பம் தங்கத்தை மாற்றுவதன்று, பின்னை வடிவத்தைமட்டும் மாற்றும். தங்கத்தை யணிகலங்களாக ஆக்கும். அதுவே யவன்செயலாகும். சிருஷ்டி தனது உபாதானகரணத்திற்குப் பின்னமன்று. சிருஷ்டிக்குமூலகாரணம் பிரஹ்மமாம். அதில் மாறுதலின்று. பிரபஞ்சத்தில் இருக்கும் பேதம் அனைத்தும் வடிவத்தில்தான் இருக்கிறது. சொரூபத்தில் அன்று. ஆகையால் பூர்வ மீமாம்சகர்கள் (ஆகிருதி) வடிவத்தைப் பற்றி கர்மத்தால் விசாரிக்கின்றார்கள்.

பாவனையில் நான்கு பொருள் உள்ளன. அவை ஞானத்தில்அன்று. ஞானம்நம்பிக்கைமூலமன்று. அது விசாரத்தைப்பற்றியிருக்கிறது. இருட்டறையில் படுக்கச்சென்றபோது அங்கு கயிறு பாம்பாகக் காணப்பட்டது. உடனே தீபத்தையேற்றிப்பார்க்க கயிறு விளங்கியது பிறகு பாம்பைவிரட்டவோ அல்லது வேறொன்று செய்யவோ வேண்டுவதில்லை. ஐயமின்றி நன்றாகத் தூங்கமுடியும். பாவனையில் சாத்யரூபமான பலன் உண்டு. ஞானத்தில் சாத்யரூப பலன் அன்று.

பொ-உ. ஞானி எறும்புமுதல் யானையீறாகஉள்ள சேதனப்பொருளையும், துரும்புமுதல் மாயைவரை யெல்லாஜடப்பொருள்களையும் ஆத்மரூபமாக இருக்கிறதென்றுஅறிகிறான். ஆகையால் அவனுக்குச்சோகமும் மோகமும் உண்டாகிறதில்லை. அந்த அறிஞன்தன்னை யெல்லாவடிவமாக அறிந்து ஆனந்தமூர்த்தியாகத் திகழ்கிறான்,

8-வது மந்திரத்தின் அவதாரிகை.

ஆறாவதுமுதல் ஏழாவது மந்திரம்வரை ஆத்மா

வின் எந்தவர்ணனை செய்யப்பட்டிருக்கிறதோ அதன் திடத்தன்மையும் ஞானத்தின் பெருமையும் கூறியிருக்கிறதோ அதை நன்ருக இந்த மந்திரத்தில் சொல்லப்படுகிறது.

## 8-வது மந்திரம்

சபர்யகாத் சுக்ரம் அகாயம் அவ்ரணம் அஸ்ஞவிரம்
சுத்தம் அபாபவித்தம் |
கவிர்மனீஷி பரிபூ: ஸ்வயம்பூர் யாதாதத்யதோ அர்த்
தான் வியததாத் ஸாஸ்வதேப்ய சமாப்ய: ||

ப-உ. சபர்யகாத்= ஆத்மா சர்வவியாபீ. சுக்ரம்= சுவயம்பிரகாசம். அகாயம் சூக்குமசரீரரஹிதம் அவ்ரணம்= புண்பொடி அற்றது. அஸ்ஞவிரம்= நரம்பு நாடியற்றது ஸ்தூலசரீரரஹிதம். சுத்தம் = தூய்மையானதும், அபாபவித்தம் = பாவமற்றதுஅதாவது, காரண சரீரரஹிதம். கவி:= கிராந்ததரிசி.அதாவதுஞானி-மனீஷி= மனதிற்கு ஈசன். பரிபூ: = எங்கும் நிறைந்தவன். சுவயம்பூ: காரணமற்றது, சாஸ்வதேப்ய: சமாப்ய:= நிலையுள்ள சம்வத்ஸரரூப பிரஜாபதிகளுக்கு. யாதாதத்யதோ = அவர்கள் யோக்யதைக்குத்தக்கவாறு. அர்த்தான்வியததாத்= கர்மங்களை விபாகஞ்செய்தது.

வி-உ. இச்சையுடையவனுடைய பிடிவாதம் ஒரு மனிதனிடத்தில் இருக்கின்றது. அஞ்ஞானி, உலகத்தில் உள்ள வடிவத்திற்கும், அதனுடையரூபம், நிறம், சுவை, ஸ்பர்சம், நாற்றமுதலிய பொருள்களுக்கும் நிரம்ப ஏற்றங்கொடுக்கின்ருன். ஞானி இதற்கு மாருக ஒருவனிடத்திலோ, அல்லது ஒரு பொருளிலோ

மகத்துவம் வைப்பதில்லை. தனித் தனிப் பொருள்க ளுக்கு ஏற்றங் கொடுப்பதன்று. ஞானியின் திருஷ்டி வஸ்துவில் இருக்கிறதன்று. பின்னை அவைகளுக்கு மூலகாரணமானப் பிரஹ்மத்தில் இருக்கின்றது. பக வான் சங்கரருடைய திருஷ்டி யெப்பொழுதும் ஆத்மா விலேயேயிருந்தது. அதுதான் ஞானிக்குஅழகு. ஆகை யால் இந்த மந்திரத்தில் ஆத்ம வர்ணனம் செய்யப் படுகிறது. எந்த ஆத்மாவை யேகத்வமென்றும், விஜா னதஃ என்றும், அனுபஸ்யதஃ என்றும் கூறப்பட்டிருக் கிறதோ அதைத்தான் இந்த மந்திரமும் விளக்குகின் றது என்று ஆசார்ய ஸ்ரீ சங்கரஸ்வாமிகள் கூறுகின் றார்கள்.

இந்த மந்திரத்தில் ஸ—புல்லிங்கம். ஆனால் சுக்ரம் அகாயம், அவ்ருணம், அஸ்நாவிரம், சுத்தம், அபாப வித்தம், இவை எல்லாம் நபும்சலிங்கம். இந்த விஷ யத்தில் ஆசார்ய ஸ்ரீ சங்கரஸ்வாமிகள் நபும்சக சப்தங் களைப்புல்லிங்கமாக ஆக்கிக்கொள்ளவேண்டும் என்று கூறுகின்றார்கள். இந்த ஆத்மா எல்லாப் பூதங்களாக வும் இருக்கிறது. "ஸ—ஆத்மா பரியகாத்" எங்கும் பிர காசமாயும், ஸர்வஅதிஷ்டானமாயும் இருப்பது பிரஹ் மம். அந்தப்பிரஹ்மத்தில் எல்லாம் அதாவது உயிர் உள்ளதும், உயிர் இல்லாததுமான உலகமனைத்தும் விவர்த்தமாகும். அதாவது உண்டாகாமலே தோற்று வது விவர்த்தமாம். கயிற்றில் அரவுபோலாம். சமஷ்டி அல்லது வியஷ்டி, காரணம். அல்லது காரியம். இவை அனைத்திற்கும் ஆத்மா அபின்ன நிமித்த உபாதான காரணமாகும். நிமித்தமும் உபாதானமும் ஆத்மாவே

என்பது பொருள். அதிஷ்டானம் — அதிகஸ்தானம் என்பது பொருள். கடத்தை நோக்குகின்றபோது மண்ணுக்கு அதிகஸ்தானம் இருக்கிறது. காலத்தை நோக்கும்போதும் குடத்திற்கு முன்னும்பின்னும் இருப்பதால் மண்ணுக்கு அதிககாலம்உள்ளது. குடத்திற்கு வேருக மண்ணுக்கு சத்தை உண்டு. சத்தை இருப்பு. மண்ணுக்கு வேருக குடத்திற்கு சத்தைஇல்லை. "அகாத்— கதி = அறிதல் வியாப்தி, ஞப்தி, பிராப்தி, முக்தி இந்நான்கும் ஆத்மாவிற்கு நித்ய இலக்கணமாகும். இவை ஆத்மாவுக்கு விசேஷணம் அன்று. பின்னை லக்ஷணமாம். விசேஷண விசேஷியங்களில் நித்ய சம்பந்தம் இருக்கிறது. லக்ஷணமோ ஆத்மாவிற்கு சொரூபமாம்.

சுக்ரம் = ஜோதிமத். ஆத்மா சுடர்ஞானவடிவானவன்என்பது பொருள். "ஜோதிஷாமபிதஜ்ஜோதி"(பகவத்கீதை)ஜோதிஷாம் அபி = சூரியன்,சந்திரன்,நக்ஷத்திரங்கள், மின்னல், அக்னி முதலிய பிரகாசங்களுக்கெல்லாம், தஜ்ஜோதி = காரணமான ஜோதி ஆத்மா என்பது மேற்கூறிய வாக்கியத்தின் பொருள். பிரகாசமயன்என்று மொழிந்ததால் இந்திரியங்களுக்கும் பொருந்தும். ஏனெனின் இந்திரியங்களும் ஒளி உள்ளவைகளே. இந்திரியங்கள் ஒளிமயமாக இருந்தாலும் அவைகள் விஷயங்களைமட்டும் விளக்கும். ஆத்மாவை விளக்கமாட்டா.

"அகாயம்" காயம் = சரீரம், அதற்கு எதிர்மறை அகாயம். அதாவது சூக்குமசரீரம் ஆத்மாவிற்கு அன்று என்பது பொருள். அவ்ரணம், அஸ்னுவிரம் என்னும் பதத்தால் ஸ்தூலசரீரம் ஆத்மாவிற்குஅன்று

என்பது தெளிவாயிற்று. ஸஞவிரம் = நரம்பு. விரணம் = புண், சிலந்திமுதலியவைகள். இவையெல்லாநோய்களுக்கும் உபலக்ஷணம். சுத்தம் = அவித்யாரகிதம். ஏனெனின் ஆத்மாவில் அவித்தை நீங்கலாக வேறுவிதமான மலம் வருவதற்குக் காரணமில்லை. சுத்தம் என்னும் பதத்தால் காரணசரீரமும் சூக்குமசரீரமும் ஆத்மாவிற்கு அன்று என்பது துணிபு. அபாபவித்தம் = கருத்திருத்வபோக்திருத்வரகிதம் என்பது பொருள். நான்செய்கிறேன் என்பது கருத்ருத்வம், நான் அனுபவிக்கின்றேன் என்பது போக்திருத்வம்

ஆணவத்தால் பாபமும் பாவத்தால் துன்பமும் உண்டாகின்றன. எவன் தன்னைக் கருத்தாவாக நினைக்கின்றானோ அவனே போக்தாவாகவும் ஆகின்றான். ஆத்மா இவை இரண்டிற்கும் வேறு: "கவி:" அதாவது சர்வக்ஞன். "கவி" கவியவைப்பவன், முக்காலத்தையும் உணர்பவன். "மனீஷி" மனதிற்கு நியந்தா, மனதைஅடக்கி ஆள்பவன். "மனசோமன" "சக்ஷுஷ சக்ஷு:" என்பது சுருதி. ஆத்மா மனதிற்கு மனமாகவும் நேத்திரத்திற்கு நேத்திரமாகவும் இருக்கிறது. மனதிற்கும்காரணம் நேத்திரத்திற்கும் காரணம். "பரிபூ:" எல்லாவற்றிற்கும் மேலானது. சகலத்தையும் தன்வயம் ஆக்கியது. "சுவ்யம்பூ:" எல்லாகாரணங்களுக்கும் தானே காரணமாகவும் தனக்கு வேறொரு காரணமின்மையாகவும் இருக்கிறது என்பது பொருள். "சுவ்யம்பூ: சுவயம்பிரகாசம்" என்பது பரியாயம். சித்தைசொல்லும்போது சுவயம்பிரகாசமென்றும் ஸத்தைசொல்லும்போது சுவயம்பூ: என்றும் கூறப்படுகின்றது.

"யாதாதத்யேன" எது எப்படியோ அது அப்படி. அர்த்தான் = பிரயோஜனம், பலன். சம்வத்ஸரம் என்னும் பிரஜாபதிகளுக்கு கர்மத்தையும் கர்மபல விபாகத்தையும் அதாவது வேற்றுமையும் அளிக்கின்றது என்பது கருத்து, இந்த மந்திரத்தில் நிற்குண பிரஹ்மத்தை நன்ருக வர்ணித்து இருக்கிறது. இறைவனைப் பார்க்கிலும் ஞானி உயர்ந்தவன். ஏனெனின் இறைவனிடத்தில் மாயை இருக்கிறது. ஞானியினிடத்தில் அன்று.

பிரஹ்மஞானி ஆப் பரவேஸ்வர |
பிரஹ்ம ஞானிகோ டூண்டே மஹேஸ்வர ||

ஹே! பிரஹ்மஞானி! நி சாக்ஷாத் பரமேஸ்வரர் ஏனெனின் பிரஹ்மஞானியை பரமேஸ்வரன்தேடுகின்ருர்என்பது மேற்கூறிய சுலோகத்தின் பொருள். "மூவரும் வணங்கி முடியால் அவனது ஏவல்செய முந்துருவரே" (சசிவன்னபோதம்). அவனது ஏவல்செய = ஞானிக்கு பணிவிடைசெய்ய, மூவரும் = பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரர்களும். முடியால் வணங்கி = சிரசால் வந்தித்து, வாயாரவாழ்த்தி, மனமார நினைந்து, நான் நீஎன்று முந்துருவர் = முன்னே நிற்பர்என்பதுபொருள். கவி = சித்தவஸ்துவை வர்ணிப்பவன். "பச்யதேவச்ய காவியம் நமமார நஜீரியதி (சுருதி) அந்த பரமேஸ்வரனுடைய காவியம் படைப்புத்தொழிலைப் பார். பகவானுடைய புகழுக்கு தோற்றமும் அழிவும் இல்லை. (கவ்ருவர்ணனே) என்பது வினைப்பகுதி. இதற்கு பொருள் உள்ளதை உள்ளவாறு கூறவேண்டும். "மனீஷி" = மனிஷா என்பது புத்தி. புத்தி, மனதை தீயவழியில

ருந்து நல்வழிக்குத்திருப்புகிறது. அந்த புத்தியையுடையவன் மனீஷி. மனதைஒழுங்குபடுத்துவதற்குஅறிவும் ஆற்றலும் வேண்டும். வாசனை தானுகவே உண்டாகிறது. கர்மமும் விசாரமும் கர்த்ருத்வத்தால் உண்டாகின்றன. இவையிரண்டும் கர்த்தாவுக்கு வசமாகஇருக்கிறது. ஸ்மிருதி, மிருதிக்கு முன்னேடிசாதனம். நிகழ்காலத்தில் மிருதி (மரணக்குறிதான்) இறந்தகாலத்தில் ஸ்மிருதியாகிறது. விசாரம் தொழில் இவ்விரண்டுக்கும் நடுவில் மனதை வைக்கவேண்டும். வாசனையனுசாரமாக வினைகளைச்செய்யக்கூடாது. விவேகமூலமாகச் செய்யவேண்டும. வாசனைகர்மம் இவிரண்டின் தொடர்பை துண்டிக்கவேண்டும். நிச்சயத்தையும் கர்மத்தையும் ஒன்றுசேர்க்கவேண்டும். இவ்வாறு மனதின்வாசனையை வென்று விவேகத்தோடு எவன் கர்மத்தைச் செய்வானே அவன் மனீஷியெனப்படுவன்.

'பரிபூ:' எல்லாவற்றையும். சாக்ரம், சுவப்பனம், சுழுத்தி இவையெல்லாம். எல்லாவற்றிலும் விளங்கும் விஸ்வதைஜஸபிராஞ்ஞன்முதலிய பொருள்களனைத்தையும் எது கடந்து நிற்கிறதோ அந்த ஆத்மா பரிபூ: எனப்படும். சுவயம்பூதான் தனது சத்தையால் சத்தாகி விளங்குவது. அதனுடைய இருப்பில் வேறு இருப்புக்கிடையாது. கர்மம். பிராரப்தம், நிலைமை, முயற்சி, பரிஸ்திதி, இவையெல்லாம் ஆத்மாவிற்குக்காரணமன்று. இந்தமாதிரி கவிஎன்றதால் சர்வஞ்ஞனும், மனீஷியென்றதால் நியந்தாவும் பரிபூஎன்றதால் சத்தாவான் என்றும், சுவயம்பூ என்றதால் வாசனைவென்றவன் என்றும், ஞானியைக் குறிப்பிடுகின்றது. இந்தத்

தத்வஞானி நித்ய பிரஜாபதிகளுக்கு பழமையானகாலந்தொடங்கி பிரளயம்வரை யெல்லாமுறைகளையும் விளக்கியிருக்கிருன். விதி, விலக்கு=செய்வது செய்யத்தகாதது. இவைகளை நன்ருக அறிவித்திருக்கிருன். எந்தவருணத்தார் எத்தக்கர்மத்தைச்செய்யவேண்டும், எந்த ஆச்சிரமத்தார்எதைச்செய்யக்கூடாது. என்பன முதலிய விதிகளைத் தத்வ்ஞானிகள் சஞதன காலத்திலேயே விதித்திருக்கிருர்கள்.

ஸாஸ்திரங்களில் எல்லாவர்ணத்தார்க்கும், எல்லா ஆச்சிரமத்தார்க்கும், எல்லா அதிகாரிகளுக்கும் கடமைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. வேதவித் பிராஹ்மணன் தனியாகவோ அல்லது வித்வான்கள்கூடியோ எதைதருமம்என்று நிர்ணயித்திருக்கிருர்களோ அதைத் தருமமென்று நினைக்கவேண்டும். அதல்லாமல் அஞ்ஞானிகள் ஆயிரம்பேர்கூடி யெதைத் தருமமென்று கூறுகின்ருர்களோ அதுதருமமாகாது என்பது மனுஸ்மிருதி.

பொ-உ. எங்கும் வியாபகமாகவும், ஜோதிமயமாகவும்‘ஸ்தூல சூக்கும காரண ஸரீரங்கள் இன்றியதாகவும், பாவபுண்ணியம் அற்றதாகவும், முக்காலத்தையும் உணர்ந்ததாகவும், மனதை வென்றதாகவும், எல்லாவற்றையும் கடந்ததாகவும், அகாரணமாகவும். காரணமாகவும். ஸம்வத்ஸரமென்னும் பிரஜாபதிகளுக்கு விதிவிலக்குகளைப் போதித்ததாகவும், இருப்பது ஆத்மாவாகும்.

9-வது மத்திரத்தின் அவதாரிகை.

முந்திய மந்திரத்தில் பிரஹ்மம், பிரஹ்மஞானம்,

பிரஹ்மஞானி இவர்களுடைய மகிமையைக்கூறி இந்த மந்திரத்தில் அஞ்ஞானி எவ்வாறு கர்மம் உபாசனை என்னும் இரண்டையும் ஒன்ருகஅனுஷ்டித்தும் ஒழுக்கமாக இருந்துகொண்டும் தனது அந்தக்கரணத்தை சுத்திசெய்து பிரஹ்மஞானத்தின் அதிகாரி ஆவதற்கு இந்த மந்திரம் துடக்கப்படுகிறறு.

அந்தந்தமः பிரிவிசந்தியேஅவித்யா முபாசதே ।
ததோபூய இவதே தமோயஉவித்யாயாம் ரதா: 9 ॥

ப-உ. யே = எவர்கள். அவித்யாம் உபாசதே = அவித்தையை உபாசிக்கின்ருர்களோ தே = அவர்கள் அந்தந்தம: பிரவிசந்தி = பயங்கரமான இருளை அடைகின்ருர்கள். ய. உ. = எவர்கள், வித்யாயாம் ரதா:= வித்தையைமட்டும் உபாசிக்கிருர்களோ, தே = அவர்கள், ததோபூய இவதே தமோ = மேற்கூறியதைப்பார்க்கிலும் அதிகமான இருளை அடைகின்ருர்கள்.

வி-உ. இந்த மந்திரத்தில் முக்கியமானவிஷயம் வித்தையும் அவித்தையுமாம். இவை இரண்டுபதமும் நன்ருககவனிக்கத்தக்கது. இவ்விரண்டிற்கும் பொருள் யாது என்று நன்ருக விசாரிக்கவேண்டும். ஆசார்ய ஸ்ரீசங்கரருடைய மதானுசாரம் "ஈசாவாஸ்யம் இதம் சர்வம்" = இது வித்யாரூபம். "குர்வன்ஏவ கர்மாணி" இது அவித்யாரூபம். பிரதமமந்திரத்தில் ஞானம்கூறப்பட்டிருக்கிறது. இரண்டாவது மந்திரத்தில் கர்மம் கூறப்பட்டிருக்கிறது. ஞானத்தில் இருள்இல்லை. கர்மத்தில் ஒளிஇல்லை, இங்கு சுருதி ஞானகர்ம சமுச்சயத்தைப் பிரதிபாதிக்கின்றது. இந்த உபநிஷத் முழுவதிலும் எதைக்கூறியிருக்கிறதோ அதுவித்தை அதற்கு

புறம்பானவை அவித்தையென்று பாஷ்யக்காரர் ஆசார்யஸ்வாமிகள் கூறியிருக்கின்றார்கள். சமன்வயம் வேறு சமுச்சயம் வேறு. சமுச்சயம் என்ற சொல்லுக்கு பொருள் இரண்டு பொருளும் ஒன்றுபட்டு ஓரிடத்தில் இருப்பது. சமன்வயம் ஒன்றின்பின் ஒன்றாகவும் முன்னும் பின்னுமாகவும் இருப்பது. ஆனால் இந்தமாதிரி கர்மமும் ஞானமும் ஒன்றுபட்டிருப்பது சாத்தியமன்று. ஞானத்தில் இரண்டு விபாகம்—பிரபஞ்சஞானம் ஒன்று, பிரஹ்மஞானம் ஒன்று. இதை இந்திரியஞானமென்றும் ஆத்மஞானமென்றும் கூறலாம். இந்திரியவாயிலாக உண்டாகும் ஞானம் இச்சைக்கும் பிரயத்தினத்திற்கும் காரணமாகும். நாம் கனியை கண்ணால் பார்க்கிறோம் அப்பொழுது அதில் இச்சை உண்டாகிறது. பின்பு அதை பறிப்பதற்கு முயற்சி உண்டாகிறது. ஞானம் எப்பொழுது அன்னியப்பொருளில் உண்டாகுமோ அப்பொழுது அது விருப்பாகவும் அல்லது வெறுப்பாகவும் இருக்கலாம். விருப்புள்ள பொருளை அடையவும் வெறுப்புள்ள பொருளை விலக்கவும் இச்சையும் முயற்சியும் உண்டாகும். ஆகையால் இந்திரியஜன்யஞானம் காரணமாகும். இந்திரியஞானமாயிருந்தாலும் பரோக்ஷதேவதாஞானமாயிருந்தாலும், எந்தஞானம் தனக்கு அந்நியவிஷயமாயில்லாமல் ஆத்மவிஷயமாயிருக்கிறதோ அதையும் சிந்திக்கவேண்டும். ஆத்மவிஷயக ஞானமும் கர்தா போக்தாரூபமாக இருக்குமானால் அது கர்மஉபாசனை விஷயமாகும்.

நான் செய்கிறேன் என்கிறஞானம், நான் அனுபவிக்கிறேன் என்கிறஞானத்திற்கு ஜனகமாகும். இந்த

ஞானமும் ஜீவனை இஹத்தில் போகத்திற்காக கர்மத்தைப்பண்ணி வைக்கவும், பரத்திற்காகத் தருமத்தைச் செய்துவைக்கவுமாக இருக்கிறது. சவிசேஷஞானம் அன்னியவிஷயமாகஇருந்தாலும் அல்லது ஆத்மவிஷயமாக இருந்தாலும் கர்மம்அன்றி உபாசனையில் தள்ளும்,

நிர்விஷயகஞானம் இச்சை அல்லது பிரயத்தனத்திற்கு ஜனகமன்று. நமது சுவரூபம், பிரத்யட்சம், பரோட்சம் இவ்விரண்டிற்கும் வேருகவும் சாட்சாத் அபரோட்சமாகவும் இருக்கிறது. ஆகையால் கர்த்தா போக்தாவன்று. இச்சைக்கோ அல்லது முயற்சிக்கோ காரணமல்ல. தத்வஞானம் வைராக்யத்திற்கும்காரணமன்று. ஆத்மஞானம்வந்தபிறகு எல்லாம் நமதுசொரூபமாக இருப்பதால் எதைவிடுவது எதைக்கொள்வது? ஆகையால் சகலமும் ஆத்மாவாக இருப்பதால் எதில் இருந்து வைராக்யம் உண்டாகப்போகிறது? ஆசையும் தியாகமும் அன்னியவஸ்துவில் உண்டாகுமேயொழிய ஆத்மவஸ்துவில் உண்டாகமாட்டா,

இந்திரியஞானம் மனிதனை விஷயத்திற்கு இழுத்துச்செல்லுகின்றது. ஆத்மஞானம் பிரவிருத்தி நிவிருத்திரூபமன்று, இந்தஞானம் பிரத்யட்சம், அனுமானம், உபமானம், அருத்தாபத்தி முதலிய பிரமாணத்தால் உண்டாவதன்று. இது மகாவாக்கிய ஜன்யஞானமாகும். வாக்கிய ஜன்யஞானம் யாதுஎனின்? நாம் ஒரு வியக்தியின்பெயரை அறிகிருேம். ஆனல் நாம் அவரை நேரில் கண்டதில்லை. அவர் நமது முன்னிலையில்தான் இருக்கிருர். இன்னொருவியக்தி இவர்தான்

நீங்கள் விரும்பிய வியக்தியென்றுசொன்னார். முன்னே இருந்ததால் பிரத்யட்சம். அன்னியர் சொன்னபிறகு அபரோட்சமாகிவிட்டது. "அசங்கம், அகண்டம். அபரிச்சின்னம் ஆத்மா நமது சொரூபம்" என்று மகாவாக்கியமூலமாகத் தெரிகிறது. மகாவாக்கியஞானம் பிரத்யட்சத்தை அபரோட்சமாக்குகின்றது. அறிகின்ற பொருளைப்போலப் பிரத்யக்ஷமுமன்று, அறியாப்பொருளைப்போல பரோக்ஷமுமன்று. நமதுசொரூபமாக இருக்கிறபடியால் ஆத்மா அபரோக்ஷம் "அறிபடும்பொருள் நீ அல்லை. அறிபடாப்பொருள் நீ அல்லை. அறிபொருளாகும் உன்னை அனுபவித்து அறிவாய் நீயே" (கைவல்யம்).

நீ அறிபடும்பொருள் அல்லை = பொறிகளுக்குப் புலப்படுகின்ற இவ்வுலகம் நீ அன்று. அறிபடாப்பொருள் நீ அல்லை=பொறிபுலங்களுக்கு எட்டாததாகிய மாயையும் நீஅன்று, என்பது கைவல்யத்தின்பொருள். குடம், புஷ்பம், சட்டி முதலிய பொருள்களைப்போல ஆத்மா பிரத்யக்ஷமுமன்று. சுவர்க்கம், இந்திரஉலகம், சந்திரஉலகம் முதலிய பொருள்களைப்போல மாயையும் நீஅன்று அறிபொருள் ஆகும் உன்னை = அறிவு சொரூபமாயிருக்கின்ற ஆத்மா தனதுசொரூபமென்றுதன்னை அனுபவித்து ஆசாரியர் உதவியாலும் அறிவுநூல்களாகியகருவியாலும் அனுபவித்து தன்னை பிரஹ்மசொரூபமாக அறியக்கடவாய் என்பது மேற்கூறிய வாக்கியத்தின் கருத்து. அபரோக்ஷமாக இருந்தும் தெறியாததால் பரோக்ஷமாக்தெரிகிறது. ஆகையால் ஆத்மா சுருதிப்பிர்மாணத்துக்குமட்டும் எட்டும் என்பது பொருள்.

அந்தப்பிரமாணம் மகாவாக்கியம் எனப்படும். சித்தார்த்தபோதகவாக்கியம் மகாவாக்கியமெனப்படும்.

விஷயஞானத்திற்கு இந்திரியம் காரணம். பலம் விஷயாகாரவிருத்தி. ஆனால் ஆத்மஞானத்திற்கு மகாவாக்கியசிரவணம் காரணம். கரணமும் காரணமும் ஒன்று, பலன் அபரோக்ஷ ஆத்மா, சுவயம் பிரகாசம், சர்வபாசகம், அதிஷ்டானமாயுள்ள பொருளை கண் பார்க்கமுடியாது. காது கேட்கமுடியாது, மூக்கு முகர முடியாது, நாக்கு சுவைக்கமுடியாது, தொக்கு தொட முடியாது, கால் அதுவரை நடக்கமுடியாது, கை அதை பிடிக்கமுடியாது. இந்திரியம் தனியாகவோ அல்லது கூட்டமாகவோ அடையமுடியாது. அதைஎப்படி அறிவதுஎனின் ஞானத்தைக்கொண்டு அறியவேண்டும். "அறிவாலறிந்து உன் இருதாளிறைஞ்சும் அடியாரிடஞ்சல் களைவோனே" (திருப்புகழ்) அறிவாலறிந்து =ஞானத்தைகொண்டு தெரிந்து, உன் இருதாளை = உன்னுடைய இரண்டு திருவடிகளையும், இறைஞ்சுமடியார்கள் = வழிபடும் மகான்களுடைய, இடஞ்சல்= இன்னல்களை (முருகா! நீ) களைவோனே = நீக்குபவரே இதனால் பக்திமார்க்கத்திலும் அறிவைக்கொண்டு ஆண்டவனை அடையவேண்டும் என்பது தெளிவாயிற்று. மனதால் நினைக்கமுடியாது, புத்தியால்கிரஹிக்கமுடியாது. இருவிதகாரணங்களும் ஆத்மஞானத்திற்கு போதுமான வலிமைஉள்ளவைஅல்ல. இந்திரிய ஞானத்தினால் ஆத்மஞானத்திற்குச் சமுசயம்கூடாது, சமுசயம் சம்பந்தம்.

கருத்துருத்வ போக்துருத்வ ஞானத்திற்கு கருமத்தோடு சம்பந்தமுண்டு. ஆத்மாவை கர்த்தா போக்தா

வாக ஒப்புக்கொண்டால் அப்பொழுது நல்ல கருமத்தைச்செய்தால் நல்லகதியும் தீயகருமத்தைச்செய்தால் தீயகதியும் உண்டுஎனநினைக்கலாம். ஆத்மா அவ்வாறன்று. சுகம், சமிர்தி, புகழ், பெருமை இவைஎல்லாம் இருக்கும்போது சக்தி உண்டாகும். ஆகையால் முதலில் அறியவேண்டும், பிறகு அடைவதற்கு முயற்சிக்க வேண்டும். இதைப்போல தேவதா ஞானத்திற்கும் கருமத்தோடு சம்பந்தமுண்டு. தேவதைகள் இஷ்டமாக இருக்கிறபோது நமது எண்ணத்தை முடிப்பதற்கு அவர்களை அர்ச்சிக்கவேண்டும் அதனுல்பூஜைசெய்ய, வழிபட யக்ஞம் தருமம் உபாசனை இவைகளைஎல்லாம் செய்யவேண்டிவரும். ஆனுல் நிற்குணம், நிராகாரம், சர்வகதம், அசங்கம் முதலிய லக்ஷணங்கள் பொருந்திய ஆத்மாவோடு கருமத்திற்கு சமுச்சயம் எவ்வாறு பொறுந்தும், பொறுந்தாதென்பது கருத்து,

இவ்வாறு இருக்கின்ற ஆத்மாவை அறிவது எவ்வாறுயெனின் இந்தமந்திரம் பிருகதாரண்ய உபநிஷத்திலேயும் வந்திருக்கிறது. அங்கு இதற்கு என்ன அர்த்தமோ அதேஅர்த்தந்தான் இங்கும் பண்ணிக்கொள்ள வேண்டும். அங்கு இந்தமந்திரம் சப்தான்னபிரகரணத்தில் வந்திருக்கிறது. சப்தம் ஏழு, அன்னம் கர்மம். எல்லா அன்னமும் மனிதர்களுக்கும் தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும்தான் கூறியிருக்கிறது. ஐக்யஞானத்தால் உபாசனை உண்டாகமாட்டாது. உபாசனை தேகஞானம் மூலமாய் உண்டாகும். ஆண்டான்அடிமை, உபாஸ்யம், உபாசகன் இவ்வாறு பேதஞானம் வேண்டும். சப்தான்னபிரகரணத்தில் கூறியிருக்கிறது

—கர்மத்தால் பித்ருலோக அடைவும் தேவதைஞானத்தால் தேவலோக அடைவும் உண்டாகுமென்று கூறியிருக்கிறது. கர்மம்என்னும் சொல்லுக்குப் பொருள் அவித்தையும் உபாசனை என்னும் சொல்லுக்குப் பொருள் வித்தையும்ஆம். இங்கேயும் அதேமாதிரி கர்மம் அவித்தை, வித்தைஉபாசனை எனப் பொருள்கொள்ளவேண்டும்.

எந்தவஸ்து அன்னியதேசத்தில் அன்னியகாலத்தில் இருக்கிறதோ அதனோடு கர்மத்திற்கு சம்பந்தம் உண்டு. ஆகையால் உபாசனையோடும் கர்மத்திற்கு சம்பந்தம் உண்டு. அடையாததை அடையச்செய்வது கர்மம், அடைந்ததை அறிவிப்பது ஞானம். உபாசனையோடு எப்படி சம்பந்தம்என்று தெரியவேண்டும். ஒருவருக்கு கதைசொல்லுகின்றார். பகவான் கிருஷ்ணன் தேவகி கர்பத்திலிருந்துபிறக்கவில்லை; ஆனால் பிரகாசமானார்என்றுசொன்னார். அப்பொழுது பக்கத்திலிருந்த மகாத்மா சிரிக்கத்தொடங்கினார். என்னவென்று கேட்டபோது அதற்குப்பதில் கிருஷ்ணபரமாத்மா கர்பத்திலிருந்து பிறக்கவில்லையென்றால் கர்பத்தைவிட்டு விலகியாஇருந்தார்என்று மகாத்மாகேட்டார். பதில்இல்லை. பகவான் வைகுண்டத்தைவிட்டு பூமிக்கு வந்துவிட்டதால் வைகுண்டம் சூன்யமாகிவிட்டதா? இல்லை. ஏனெனில் பகவான் வியாபகவடிவன். எங்கும் நிறைந்தவன். அவன் எங்கிருந்தும் வருவதும்இல்லை போவதும்இல்லை. மறைந்த தத்வம் வெளிப்படுவது அவதாரம் எனப்படும். கண்மூடியவனுக்கு பொருள் தெரிகிறதில்லை. கண்ணைத்திறந்தால் பொருள்தெரிகி

றது. ஆகையால் மறைப்பு கண்ணில் இருக்கிறது பொருளில் இல்லை. பகவானுக்கும் ஞானிக்கும் மறைப்பு கிடையாது. மறைப்பு நமக்குத்தான். அந்த மறைப்பு நீங்க வேண்டுமானுல் ஞானம் வேண்டும். அதற்காக பகவானை உபாசிக்கவேண்டும். பூஜனை, பஜனை, கீர்த்தனை. சேவை, வந்தனை இவையெல்லாம் செய்துவருவதானது உபாசனையெனப்படும், அப்பொழுது ஞான வாயிலாக மறைப்பு நீங்குகிறது. இதைத்தான் கர்மஞானத்தின் சமுச்சயம் என்பர்.

இதை ஒரு எடுத்துக்காட்டுமூலமாக விளங்கிக் கொள்ளலாம். ஒருதனவந்தர் ஒரு மகாத்மாவைத் தெரிசிக்கப்போனுர், போகும்போது "போனவன் வெறுங்கையோடே போகாதவண்ணம் சென்று" என்னும் கைவல்யத்யத்திற்கு இணங்க ஒரு பூச்செண்டைக் கொண்டுபோனுர், அதை மகாத்மாகரத்தில் கொடுத்து வணங்கினுர். மகாத்மா அந்தப் பூச்செண்டை வாங்கி அதையே பார்த்துக்கொண்டிருந்தார். அந்த தனவந்தர் இந்த மகாத்மா பூச்செண்டையும்பார்ப்பார் நம்மையும்பார்ப்பார் என்று நினைத்தார். ஆனுல் மகாத்மா பூச்செண்டை பார்த்தாரேஒழிய பூச்செண்டை கொடுத்தவரை பார்க்கவேஇல்லை. சிறிதுநேரம் கழிந்ததும் தனவந்தர்—சுவாமின் பூச்செண்டை தங்களுக்குத் தந்தது தவருகிவிட்டது. நான் நினைத்தது, சுவாமி பூவையும் பார்ப்பார் நம்மையும் பார்ப்பார் என்று எண்ணினேன். ஆனுல் நீங்கள் என்னைப் பார்க்கவேஇல்லை, கிருபை செய்து என்னையும் பார்க்கவேண்டாமா சுவாமின்! என்று தனவந்தர் கூறினுர். இந்த மொழியை செவி

மடுத்தும் மகாத்மா சீற்றம்கொண்டு தன் கரத்தி லிருந்த செண்டை வீசியெறிந்துவிட்டு அவரைப்பார்த் தார். தனவந்தர் சுவாமின்! இவ்வளவுகோபம் தங்க ளுக்கு வரலாமா, நான் என்னசொன்னேன், அதையும் பாருங்கள் என்னையும் பாருங்கள் என்றுதானே கூறி னேன் என்றார். மகாத்மா, மீண்டும் முனிந்து என்ன தான் செய்ய விரும்புகின்றாய்என்றுகேட்க. தனவந்தர் என்னையும் பாருங்கள் என்றார். இந்தசம்சாரம் பரமாத் மாவால் செய்யப்பட்ட பூச்செண்டு. ஈசுவரன் சுயம் தனவந்தர். ஜீவன்தான்மகாத்மா. ஜீவன் சம்சாரத்தை மட்டும் பார்க்கிறான். அந்த சம்சாரத்தை தந்த ஈசுவர னைப்பார்க்கிறதில்லை. பூவைமட்டும் பார்த்தால் போது மா. அதை உண்டுபண்ணிய இறைவனையும் பார்க்க வேண்டாமா. இரண்டையும் ஒன்றுபடுத்திப்பார்ப்பது சமுச்சயமாகும்.

அவித்தை கர்மேந்திரியம். வித்தை ஞனேந்திரியம் என்பது நேர்அர்த்தம், இவை இரண்டின் கூட்டுத் தான் வாழ்க்கையெனப்படும். கண்ணால் பார், காலால் நட, கண் ஞானேந்திரியம், கால்கர்மேந்திரியம் இரண் டும் சமுச்சயமாய்விட்டது. இதை வேதாந்தத்தில் அந்தபங்குநியாயம்என்றுசொல்லுவார்கள், அந்தம் = குருடு. பங்கு முடம். ஒரு கிராமத்தில் முடவனும் குரு டனும் இருந்தார்கள் அந்தக்கிராமத்தில் தீடீரென நெருப்பு பற்றிவிட்டது. எல்லோரும் ஓட ஆரம்பித்து விட்டார்கள். அவ்விருவரும் ஓவென்று அலற ஆரம் பித்தார்கள். இதற்குள் ஓர் அறிஞன் அவ்வழியாகவந் தான். இருவரையும் பார்த்து நீங்கள் ஒருவருக்கொரு

வர் உதவிபுரிந்துகொள்ளுங்கள் என்றான். இந்த நல் லுரையைக்கேட்டுக் குருடன்தோளில் முடவன் ஏறிக் கொண்டு கஷ்டமில்லாமல் இருவரும் அடுத்தகிராமத் திற்குச்சென்றுவிட்டார்கள். மனிதவாழ்க்கையும் அந்த பங்குநியாயம்போல நடந்துவருகிறது. கர்மேந்திரியம் அந்தம், அதாவது குருடு. ஞானேந்திரியம் பங்கு அதா வது முடம், கர்மேந்திரியம் வேலைக்காரன், ஞானேந்தி ரியம் கண்காணிப்பவன், ஜீவன் அவைத்தலைவன், சரீ ரம் அலுவலகம், இவையெல்லாவற்றிற்கும் சுவாமிஈசு வரன். ஆனாலும் சகலத்திற்கும் அதிஷ்டானமும், சர்வகாரணமுமாய் விளங்கும் சித்து பிரஹ்மம் எனப் படும். ஞானேந்திரிய உதவியில்லாதுபோனால் கர்மேந் திரியம் ஒன்றும்செய்யமுடியாது. கண் வழிகாட்டாது போனால் கால்என்னசெய்யமுடியும் ஆகையால்பூர்ண வாழ்க்கை நடத்தவேண்டுமானால் ஞானேந்திரியமும் கர்மேந்திரியமும் ஒன்றுசேர வேண்டும்.

"அந்தம் தமப்பிரவிசந்தியே அவித்யாமுபாசதே" எவன் அவித்தையை உபாசிக்கின்றானோ கர்மேந்தி ரியமூலமாக நிகழும் கர்மத்தில்மட்டும் எவன் செயல் படுகின்றானோ, அவன் கர்மவாதி அல்லது கர்மத்தில் மட்டும் நிஷ்டைவைப்பவன். அவன் கொடியஇருளில் விழுகின்றான். ஏனெனில், கர்மம் ஜடம்; நான்செய்கி றேன் என்னும் ஆணவம் அவனை ஜடத்தின்பக்கமாக இழுத்துச்செல்லுகின்றது. எவனொருவன் வித்தையை —ஞானேந்திரியத்தை, அல்லது இந்திராதிதேவதை களை, போகபோக்யத்தைமட்டும் விரும்புகிறானோ, அவன் மேற்கூறிய இருளைப்பார்க்கிலும் மேலான இரு

ளிலே விழுகின்றான். வாழ்க்கையில் கர்மமும் முக்கிய மல்ல, போகமும் முக்யமல்ல, பின்னை இவ்விரண்டிற் கும் பொருத்தமான சமன்வயம் வேண்டும்.

இந்திரியஞானமும் தேவதாஞானந்தான். ஏனென் றால் சூரியன் உதவியால் கண்பார்க்கிறது. அசுவினி தேவதையுதவியால் மூக்கு நாற்றத்தையறிகிறது. திக் தேவதையுதவியால் காதுகேட்கிறது. இவ்வாறு ஒவ் வொரு தேவதையின் உதவியால் எல்லா இந்திரியங்க ளும் தங்கள் தொழில்களைச்செய்கின்றன. இந்தமாதிரி சந்திரன் உதவியால் மனத்தையும் மற்றுமுள கர ணங்களையும்அறிந்துகொள்ளவேண்டும். காளைமாட்டு உதவியால் வண்டிகளும், நடத்துபவர் உதவியால் பேருந்துகளும் (பஸ்களும், மோட்டார்களும்) எவ் வாறு செல்லுகின்றனவோ அதுபோல "ஒருவன் நடத் தாவிடத்துக் கிடக்கும் இவ்வுடம்பும்" ஒருவன் = ஆத் மா. நடத்தா இடத்து = இயக்காவிட்டத்து. இவ்வுடம்பும் கிடக்கும் = இந்தச்சரீரமும் தொழில்அற்று பிணம் போலகிடக்கும்என்பதுச் சிவஞானபோதத்தின்கருத்து. கண், காது, கை, கால் இவையெல்லாம் அத்யாத்ம ரூபம். சூரியன், திக்கு, இந்திரன், வருணன் முதலிய தேவதையதிதெய்வரூபம். தேகம்அதிபூதரூபம். ஆகை யால் இந்திரியஞானமும் தேவதைமூலமாகக் கிடைத்த பெருஞ் செல்வமாகும். இதை தேவதாஞானமென்றும், வித்தையென்றும் கூறுவார்கள். கர்மக்கிடங்கில் விழுந்தவனுக்கு வெற்றி தோல்வியில் எப்போதும் சந் தேகமுண்டு. வெற்றிகிடைத்தாலும் துன்பத்திற்குத் தான் காரணமாகும். ஆகையால்அவனுக்கு ஒருவேளை

வைராக்கியம் வரக்கூடும். ஆத்மாவைச் சிந்திக்கவுஞ் செய்வன்.

எவன் ஒருவன் போகத்தில் அழுந்துகின்றனே, அவன் ஒருபோதும் கரையேற நினையான். கர்மசக்தியைப்பார்க்கிலும் போகசக்தி மிகப்பலமுடையது. அவனுக்காகத்தான் சுருதி—"ததேபூய" அதைப்பார்க்கிலும் அதிகம் இருள்என்று கூறியது. கர்மத்தில் அழுந்துபவரைப்பார்க்கிலும், தேவதா உபாசனை பண்ணுபவர்க்கு அதிகமானஇருள் எப்படிபொருந்தும்எனின்?—உன்னிப்பார்க்கவும். தேவதை யுபாசனைபண்ணுபவர்க்கு என்னகிடைக்கிறது? சுவர்க்கம், அமிர்தம், அப்ஸரப்பெண்கள், கந்தர்வர்கள், சங்கீதம், தேவகன்னிகைகள், நாட்யம், தும்புருவர் வீணைவாத்யம், இத்தனை போகபோக்யத்தில் விழுந்து தன்னைமறந்தவன் வைராக்யத்தையடைந்து மோக்ஷத்தை யெவ்வாறு பெறமுடியும். ஆகலின் அவனுக்கு அதிகஇருள்என்று சுருதி மொழிகிறது.

பூத, பிரேத தேவதைகளை யுபாசிக்கின்றவர்கள் அநேகமாக அழிந்துவிடுகின்றார்கள். இதை உலகத்தில் கண்கூடாகக்காணலாம். அவர்கள் தெய்வத்தை நம்பித் தன் சொந்தபலத்தை யிழந்துவிடுகிறார்கள். அவர்கள் எப்போதும் அடிமையாகிமெலிந்துவிடுகிறார்கள். அவனுடையவாழ்க்கை காலில் விலங்கிட்டவன் வாழ்க்கைக்குச் சமானமாகும். தாத்பரியம் யாதோவெனின்? வாழ்க்கையில் கர்மத்திலேயோ அல்லது உபாசனையிலேயோ பற்றுமல் இரண்டையும் சமன்வயப் படுத்திக்கொண்டு போகவேண்டும்; அல்லது இரண்

டுக்கும் வேருக இருக்கும் ஆத்மாவை பிரஹ்மமாக அறி தல்வேண்டும், வலைக்குள் பறவை சிக்கியதுபோலக் கருமவலைக்குள்ளோ அல்லது உபாசனை வலைக்குள் ளோ சிக்கலாகாது,

"ஈஸாவாஸ்யம்" இந்தமந்திரத்திற்கு "சபர்யகாத்" என்னும்மத்திரம்வரை சம்பந்தங்கூறப்பட்டிருக்கிறது. "குருவன்ஏவ" இந்த இரண்டாவது மந்திரத்திற்கு வியாக்யானம் இந்தமந்திரத்தில் சொல்லப்படுகிறது. கர்மமும் குருவன் எப்போதும் செய்யமுடியாது. ஏனெ னின் கர்மத்தில் ஆயாசம். களைப்பு முதலியவையுண் டாகும். இங்கு மனிதன் எவ்வாறு எண்ணுகின்ருனே அங்குஅவ்வாறு ஆகின்ருன் என்பது சுருதிப்பொருள்.

பொ-உ. எவன் ஒருவன் அவித்தையை உபா சிக்கின்ருனே அவன் கொடிய இருளில் மூழ்குகின் ருன். எவன் வித்தையாகிய ஞானேந்திரியத்திலும் போகத்திலும் மூழ்குகின்ருனே அவன் மேற்கூறியவ னைப் பார்க்கிலும் அதிகமான இருள் உலகத்தையடை கிருன் என்பது பொருள்.

(10) பத்தாவது மந்திரத்திற்குமுன்னுரை, அவித் தையில் விழுகின்ற மக்கள் கருமத்தில் ஒடுங்குகின்ற தில்லை. அவர்கள் ஒடுங்கும்இடம் கரும ஆசிரித ஜட மாகும். அவர்களுக்கு ஒருவாறு கதிகூடும், ஜடத்தை யாரும் விரும்பமாட்டார்கள். வித்தை காரணதிரவியம் விஷயத்தில் இச்சை உண்டாகிறது. விஷயத்தில் இருப்பு இருக்கிறது. பிரியம் இருக்கிறது. பிரகாச மில்லை. ஆனல் இந்திரியத்தில்மூன்றும்இருக்கின்றனை

இந்திரியம் நமக்கும் பிரியமாகஇருக்கிறது. ஏனெனின்? கண்தெரியாமல்போக விரும்புகிறதில்லை. விஷயத்தில் மூழ்குகின்றபோது பிரகாசத்தை இழந்துவிடுகிறோம். ஆனால் பிரியம் அங்குமிருக்கிறது. ஆகையால், விஷயத்தில் வைராக்கியமுண்டாகிறதில்லை. விஷயத்தில் இந்திரிய மூழ்குகின்றபோது சேதனத்தையிழந்துவிடுகிறது. விஷயத்தில் சுகபுத்தியுண்டாகிறது. அதனால் இராகமுத்பன்னமாகும். இராகம் = ஆசை. இராகத்தினால்சிந்தனை, சிந்தனையினால் மீண்டும் மீண்டும் விஷயத்தில் விழும்படி நேரிடுமேயொழிய மீளமுடியாது. இவ்வுலகத்தின் இந்திரிய போகமும் பரலோக இந்திராதிபோகமும் விஷயந்தான். இதன் தொடர்புஅடுத்த மந்திரத்தில் கூறப்படுகின்றது.

## (10) தசமமந்திரம்.

அன்யதேவாஹுர் விதயயா அன்யதேவாஹுர
வித்யயா |
இதிசுசுருமதீராணாம் யேனஸ்தத் விசசட்சிரே || 10

ப-உ, வித்யயா = வித்தையின்பயன், அன்யத் = வேறு என்று ஆஹு; = கூறுகின்றார்கள். இரண்டிடத்தில்இருக்கும் ஏவ சப்தத்திற்குபொருள் உறுதி. யேந = எவர்கள் நः எங்களுக்கு தத் = அதை விசட்சிரே = நன்றாகக் கூறுகிறார்களோ (அவர்களிடத்தில்) இதி = இவ்வாறு. சுசுரும = கேள்வியுற்றோம். அவர்கள் எப்படிப்பட்டவர்கள், தீராணாம் = தீரர்கள்.

வி-உ. வித்தையின் பலன் வேறு—இந்திரியங்களுக்கு விஷய போகமும் சுவர்காதிவிஷயமும் ஆம்

அவித்தையின் பலன் வேறு. கருமத்தின் அடைவும் அதன் பயனுகிய ஜடத்வத்தின் அடைவும்ஆம். நேரானஅர்த்தம் என்னவென்ருல் கருமத்திற்குப்பலன் அவித்தையும் இவ்வுலகத்தில் பெண்டுபிள்ளை, புகழ், பொன், பொருள், நிலம் முதலியவைகளாம். உபாசனையின்பலன்வித்தை. சுவர்க்கம்,இந்திராதிபோகம்,பிரஹ்மலோகத்தின் அடைவும். இதை நாங்கள் சுவயமாகக் கல்பிக்கவில்லை, தீரமகான்கள் மூலமாக கேள்வியுற்ருேம். தீரபுருஷர்மூலமாகக் கேட்கப்பட்டதென்றதால் அபௌர்ஷேயம் என்ற சொல்லுக்கு விரோதமன்று. ஏனெனின் இங்கு தீரபுருஷன் என்பது வியக்தியைப் பற்றிக் கூறியதல்ல, பின்னை யாதோவெனின் கூறுகின்ற விஷயத்தில் மக்களுக்கு நம்பிக்கையுண்டாகும் பொருட்டு உலகவாழ்க்கையை அனுவாதம் பண்ணியிருக்கிறது. எவ்வாறு உலகத்தில் ஆன்ருேர்கள் சான்ருேர்கள்வாக்யம் பிரமாணமோ,அதுபோலப்பெரியோர்கள் வாக்யம் பிரமாணம் என்று சுருதிகூறுகின்றது. இந்தசுருதிவாக்கியங்களை அனுதிகாலமாகப் பெரியோர்கள்கேட்டு அனுபவித்து வருகிருர்கள். அதனுல் அவர்கள் வாக்கியம் நம்பத்தக்கது.

"தீர:" தீமான்—புத்திமான். அதாவது அறிவாளி என்பதுகருத்து. தத்பதார்த்தம், த்வம்பதார்த்தம் அதுபோல் அகம்பதார்த்தத்தில் இருக்கும் (அகண்டார்த்தத்தை) ஜீவபிரஹ்ம ஐக்யத்தை தாரனைசெய்யும் புத்தி தீ எனப்படும், அதையுடையவன் தீரன் யெனப்படுவான். "தியம்ஈரயதீதிதீர:" பரமாத்மா. அவரை அடைந்தவன் தீரன். "தீயோயோநः ப்ரசோதயாத"

(காயத்ரீமந்திரம்) ஹே! பிரபோ! யோ = பரமாத்மா. நః தியோ = எங்களுடைய புத்தியை (நல்ல கருமங்களில்) பிரசோதயாத் (அந்த ஒளிமயபரமேஸ்வரன்) பிரேரிக் கட்டும் = யேவல் செய்யட்டும்என்பது மேற்கூறிய மந் திரத்தின் பொருள், இன்பதுன்பம், ஜனன மரணம், சம்யோக வியோகம், (புணர்தல் பிரியுதல்) வெற்றி தோல்வி, புகழ். இகழ் இவைகளில் எவர் பற்றற்று நடு நிலமையாக இருக்கிருரோ அவர் தீரன் யெனப்படுவர். "விகாரஹேதௌ சதி விக்ரீயந்தே ஏஷாம் நசேதாம்சி த்யேவதீரா:" (காளிதாசர்)விகாரஹேதௌ சதி = மன தை கலங்கச்செய்கின்ற காரணங்கள் முன்னிலேயில் இருந்தும், ஏஷாம் சேதாம்சி = எவர்களுடைய சித்தங் கள் நவிக்ரியந்தே = கலக்கத்தை அடைடுறதில்லேயோ தஏ வ = அவர்களே, தீரா: = வீரர்கள் என்று காளிதா சர் கூறுகின்ருர். இவ்வாறு கருமயோகி, பக்தியோகி, ஞானயோகி இம்மூவரும் வீரர்கள். ஞானி ஒருவனே அதிதீரன்யெனப்படுவான். அவர்கள் எவ்வாறு அறிந் தார்கள் எனின்? "யோதத் விசசட்சிரே" அவர்கள் இந்த நிலேயைப் பார்த்தார்கள், பின்பு அனுபவித்தார் கள். அதன்பிறகு எங்களுக்குச்சொன்ஞர்கள் என்பது பொருள். 'சட்சிங்' என்பது ஒரு விஜேபகுதி இதற்கு சொல்லுதல், பார்ப்பது, அனுபவிப்பதுஎன்பதுபொருள். சத்யதரிசி உண்மையான வீரஞவான். அனுபவி ஆத் மதரிசி ஞானி இவர்களே இந்த ஆத்மசம்பந்தி விஷ யத்தைப்பற்றி பேசும் திறமையுடையவர்கள் "சுசுர்ம" அவர்களிடம் நாங்கள் முறைப்படி கேள்வியுற்ருேம்.

இது சுருதியாய் போதிக்கப்பட்டும் ரிஷிகளால் அனு பவிக்கப்பட்டும் வந்தஞானம். ஆகையால் இதில் யாதொரு ஐயமும் இன்று.

பொ-உ. அவித்தைக்குப் பலன்வேறு. வித்தைக் குப் பலன்வேறு என்று மகான்கள் மூலமாகக் கேள்வி யுற்றேம். இது உறுதி. இதில் இந்தமாதிரி இருக்குமா இராதா என்று எட்டுணையும் ஐயமில்லை.

11வது மந்திரத்தின் அவதாரிகை,

இந்த மந்திரத்தில் வித்தையும் அவித்தையும் வேறு வேறுயென்று கூறி இரண்டின் பயனும் வேறு வேறுஎன்று அறிவித்திருக்கிறது. இதன்ஞானம் அனு தியென்றும் கூறியிருக்கிறது. இனிவரும் மந்திரத்தில் இரண்டிற்கும் சமுச்சயம் கூறப்படுகிறது.

"வித்யாஞ்ச அவித்யாஞ்ச யஸ்தத்வேதோ பயம் ஸஹ |
அவித்யயா மிருத்யுந்தீர்த்வா வித்யயாஅமிர்த மஸ்னுதே ||

ப-உ. ய:=எவன் வித்யாஞ்ச அவித்யாஞ்ச= வித்தையையும் அவித்தையையும், உபயம்ஸஹ=ஒன் ருகச்சேர்த்து, வேத=அறிகிருனே. அவன், அவித் யயா=அக்ஞானத்தால், மிருத்யுந்தீர்த்வா = ப்ரமாதி தோஷங்களைக்கடந்து, வித்யயா = உபாசனையால், அம்ருதம் அஸ்னுதே=அமிர்தத்தை அடைகின்ருன்.

வி-உ. வேத=உபாஸ்தே. எவன் வித்தையை யும் அவித்தையையும், அதாவது இரண்டையும் ஒன்

ருகவேசேர்த்துக் கேவலகருமத்திலும் பிரியமில்லாமல் கேவலபோகத்திலும் பிரியமில்லாமல் இரண்டினிடத்தி லும் ஒன்றுபோல்பிரியம்வைத்து வருகிருனே. அவன் வாழ்க்கைகளில்பிரவர்த்திஞானமும்அதைப்போலஇச் சையும்சமானமாகவைக்கிருன். அந்தஅறிஞன் அவித் தையால்மிருத்யுவைநீக்கி சோம்பேரித்தனத்தைவிட்டு வித்தையால் உபாசனேயால் அமிர்தத்தை அனுபவிக் கிருன். அவித்தை பிரவர்த்தி. வித்தை, உபாசனே. பிரத்யட்சம், அனுமானம். உபமானம், அர்த்தாபத்தி, அனுபலப்தி இவையெல்லாம் அவித்தையெனப்படும். வியவகாரத்தில் வித்தையும் அவித்தையும் ஒன்றுசேர வேண்டும். ஜடவாதியும் ஆகக்கூடாது. மனோராஜ்ய முஞ் செய்யக்கூடாது. வாழ்க்கையில் போகத்தையும் கர்மத்தையும்சேர்த்து அனுஷ்டிக்கவேண்டும். ஏணி யைவிரும்புவதுஏணியிலிருப்பதற்கன்று.பின்னே மேல் மாடியில் ஏறுவதற்கல்லவா. அதுபோல இல்லறத்தை அல்லது போகத்தை விரும்புவது அதில் மூழ்குவதற் கன்று. இல்லறமும் போகமும் துறவறத்திற்கும் ஆத்ம நிலையை அடைவதற்காகவாம்.

"அவித்யயா மிருத்யும் தீர்த்வா" அவித்யயா— கர்மத்திஞல்—வேதத்தில் விதித்த நல்ல கர்மங்கள் இங்கு அவித்தையெனபபடும். தமோகுணமும் ரஜோ குணமும் மிருத்யு—மரணமெனப்படும், நல்ல கர்மங்க ளால் தீயகர்மங்களையொழித்துஎன்பது ஒருபொருள். அவித்யயா — கடமைகளால் — மிருத்யு = பிரமாதம், ஆலஸ்யம், சோம்பல்=செய்யவேண்டிய கடமைக ளைச் செய்யாதிருத்தல். அதுவே மனிதனுக்கு மரண

மாம். அதுவே பிரமாதமாம். பிரமாதத்தை மரண மென்று பாரதத்தில் கூறப்பட்டிருக்கிறது. "பிரமாதம் வைமிருத்யுரஹம் பிரவீமி" என்பது மகாபாரதம். போகத்தை அதிகமாக விரும்பும்போது பிரமாதமுண் டாகும். அதனுல் தெய்வபக்தி குறையும். அதனுல் மனிதன் கடமையிலிருந்து நழுகுவன். அதுதான் அவ னுக்கு மரணமாகும். ஆகையால் நல்ல கர்மத்தின்மூல மாகப் பிரமாதத்தை முற்றிலும் வெல்லவேண்டும். அதை வென்ருல் மரணத்தை (எமனை) வெல்லலாம், மரணம் ஜடவடிவ தேகத்திற்குத்தான் உண்டாகும், சேதனமான ஆத்மாவிற்கு உண்டாகாது.

"பிறந்தது மிறந்ததற்ற பிரமமா நானே நானே" (கைவல்யம்). ஜனனமும் மரணமுமற்றக்கூடஸ்த ஆத்மா நானே என்பது மேற்கூறிய வாசகத்தின் பொருள். தேக திருஷ்டிதான் மரணம். ஆத்மதிருஷ் டியே ஜீவனம் என்பது தத்வம். யமனை வெல்வது தேகதிருஷ்டியைவிட்டு கடமைகளை செய்வது. கட மைகளைச் செய்யாதிருப்பதையும் பிரமாதத்தையும் வேதாந்தம் மரணம்என்று கூறுகிறது. அதை கடமை யைச் செய்வதுமூலமாக வெல்லலாம் என்பது கருத்து. "வித்யயா அமிர்தம் அஸ்னுதே", வித்தையினுல்அமிர் தத்தை அடைகிருன். ஞானேந்திரியம், மனம், புத்தி இவைகளை உபயோகப்படுத்திக்கொண்டு ஈஸ்வரனை உபாசித்து அவன் அருளால் "அமிர்தம் அஸ்னுதே" — சாபேக்ஷிக அமிர்தத்தை அடைகிருன் என்பது பொருள். விசாரிக்குமிடத்தில் கண், கால், காது, மூக்கு, மனம், புத்தி, இவைகளால் அமிர்தத்தை அடைவது

அசம்பவம். இவைகள்மூலமாக அடையப்படும் அமிர்தம் நஸ்வரமே, அழியப்படுவது. பொறிபுலங்களால் அமிர்தத்தை அடைவது ஆகாசத்தைக் கறந்து பால் சாப்பிடுவதும், கண்ணிலாதவன் கதிவரவனைக்காண்பதும், முடவன் கொம்புத்தேனை விரும்புவதும், மலடி பிள்ளைபெற நினைப்பதுவும் போலாகும். ஆனாலும், கருமம், உபாசனை முதலிய சாதனங்களால் அழியாத பெற்றியை அடையவிரும்புகின்றான் என்பது பொருள். அவித்தை காயசுத்தி, வித்தை அந்த கரணசுத்தி. இவை இரண்டுமூலமாகவும் ஞானமுண்டாகிறது. ஞானத்தால் அமிர்தம் உண்டாகிறது என்பது விவேகம். மரணம் என்பது ஒருவிதமான பயம். அது தேக ஆசக்தியுடையவனுக்குஉண்டாகும். தேகத்தில்ஆசக்தியுடையவன் போகத்தில் ஆசக்தியுடையவனாகுவன். அவித்தை லௌகீக கர்மம். வித்தை பிரம்மலோகம்வரை வைராக்யம். இவ்விரண்டையும் சமன்வயமாகச் செய்யவேண்டும். இவைஇரண்டையும் முறைப்படி செய்துவருவதால் மனத்தூய்மையுண்டாகி பிரம்மலோகம்வரை அநித்யபுத்தி உதயமாகிறது. அப்பொழுது போகத்தில் வெறுப்புவருகிறது. பிறகு தேகத்தில் பயம் நீங்குகிறது. இம்முறையாக அவன் ஞானத்திற்கு அதிகாரி ஆகிறான்.

"ஈஸாவாஸ்யமிதம் சர்வம்" "நகர்மலிப்யதேநரே" "அநேஜதேகம்" "தததேஜதி" "சபர்யகாத்" ஆதிமந்திரத்தில் எந்த பரமாத்மாவை வர்ணிக்கப்பட்டிருக்கிறதோ அந்த ஆத்மாவை அடைவதற்கு அதிகாரி யார் எவ்வாறு அதிகாரிஆவது என்பதை இந்த 6வது மந்திரங்களில் கூறப்படுகிறது.

பொ-உ. எவன் வித்தையையும் அவித்தையையும் நன்ருகத்தெரிந்து அனுஷ்டித்து வருகிருனே அவன் கருமங்களால் சோம்பலைவிட்டு வித்தையால் கடமைகளைச்செய்து அமிர்தத்தை அடைகிருன்.

12-வது மந்திரத்தின் அவதாரிகை,

முந்திய மூன்று மந்திரத்தில் கர்மம் உபாசனையிவையிரண்டிற்கும் சமுச்சயங் கூறிவிட்டு, வருகிற மூன்று மந்திரங்களில் (பதார்த்த) தத்வம் பதார்த்த சோதனைக்காகக் காரிய பிரஹ்மம், காரணபிரஹ்மம் இவிரண்டின் உபாசனை சம்பந்தி விஷயம் மொழியப்படுகிறது.

12-வது மந்திரம்.

அந்தந்தம: பிரவிசந்தியேஅவித்யாமுபாசதே |
ததோபூயஇவதே தமோயஉசம்பூத்யாம் ரதா: ||

ப-உ. யே = எவர்கள். அசம்பூதிம்=காரணப் பிரஹ்மத்தை. உபாசதே=வழிபடுகிருர்களோ. தே= அவர்கள். அந்தந்தம: இருள்நிறைந்த உலகத்தில். பிரவிசந்தி=நுழைகின்ருர்கள். யஉ=எவர்கள். சம்பூதிம் உபாசதே=காரிய பிரஹ்மத்தைமட்டும் வழிபடுகிருர்களோ. தே=அவர்கள். ததோபூயஇவ=அதைப் பார்க்கிலும் அதிகமான இருள் உலகத்தையடைகிருர்கள் என்பது பதப்பொருள்.

வி-உ, முந்திய மூன்று மந்திரங்களில் வித்தை யவித்தையின் சமுச்சயம் சொல்லப்பட்டது. இனி மூன்று மந்திரங்களில் வித்தை யவித்தையின் விஷ-

யங்களின் ஒற்றுமை கூறப்படுகிறது. சம்பூதி—சம்ப வனம். அதாவது காரியபிரஹ்மம். எதற்கு ஜன்மம் உண்டாகிறதோ அது காரியப்பிரஹ்மம் எனப்படும். அசம்பூதி—அசம்பவனம், எதற்கு ஜன்மம் உண்டா கிறதில்லையோ அது அசம்பவனம். அதாவது காரணப் பிரஹ்மம். இது நாசமுடையது. ஏனெனின். இதில் காரிய அவஸ்தை லயத்தையடைகிறது. "யத்திருஷ் யம் தன்னஷ்டம் யத்ஜன்யம் ததனித்யம்" எது திருஸ் யமோ அதாவது விஷயமோ அது மரணதருமம் உடை யது. எது உண்டாகிறதோ அது நாசமுடையதாகும். ஞானேந்திரியம் கர்மேந்திரியமிரண்டையும் ஒருவனே யுபயோகஞ் செய்கிறுன். ஆனுல் எதில் செய்கிறுன் என்பதைச் சிந்திக்கவேண்டும். காரியபிரஹ்மத்திலா அல்லது காரணபிரஹ்மத்திலாவென்று விசாரிக்க வேண்டும். காரணப்பிரஹ்மத்தில்மட்டும் பிரயோகிப் பானுல் அவன் கொடிய இருள்வடிவ ஜடத்தன் மையை அடைகிறுன், இவனைப்பார்க்கிலும் அதிக துன்பத்தையடைபவன் காரிய பிரஹ்மத்தில்மட்டும் பொறிகளைசெலுத்துவான். அசம்பூதி = காரணப்பிரஹ் மம். இங்கு உபாசனை, விசாரமன்று. ஏனெனின், எல் லாவிடமும் ரத: என்று கூறிஇருக்கிறது. அறியவேண் டுவதல்ல. செய்யவேண்டுவதுதான். காரியபிரஹ்மம் ஜகத். இது சரீரம். ஒருவன் சரீரத்தைப் பேணுவதி லும் அளவுக்குமிஞ்சியபோகத்தில்ஈடுபடுவதும் அதி லேயே காலத்தைக் கழிப்பதுவும் காரியபிரஹ்மத்தை உபாசிப்பதாகும். இதில் சுயநலமிருக்கிறது. சுயநலம் மனிதனை மேலே செல்லவொட்டாமல் கீழேதள்ளு கிறது. பாறையை அடிவயிற்றில் கட்டிக்கொண்டு

மேலே யெவ்வாறு போகமுடியாதோ அதுபோலப் பொதுநலமில்லாமல் சுயநலம் உற்றவன் கரையேற முடியாது.

எவன் காரியரூபமான சரீர போஷணத்தையும், போகவிருப்பையும், சுயநலத்தையும்விட்டுக் குடும்பத்திற்காகவும், கிராமத்திற்காகவும், தேசத்திற்காகவும், விராட்டு பரமேசுவரனுக்காகவும். பாடுபடுகின்றனோ, அவன் காரணபிரஹ்மத்தை உபாசிக்கிறன். சுயநல மற்ற கருமங்கள் மனித சமுதாயத்திற்குச் செய்யும் சேவைகள் எல்லாப்பிராணிகளுக்கும் இயற்றுந்தொண்டுகள். இவைகள்யாவும்இறைவனுக்காகின்றது. தேசத்திற்கும்,நாட்டுமக்களுக்கும்,உலகக்ஷேமத்திற்கும் பணி செய்வது சனுதன தருமமாகும். நாட்டின் எல்லை விராட்டு பரமேசுவரனிடத்தில் முடிவடைகின்றது. காலத்தின் எல்லையும் இறைவனிடத்தில்தான் முடிவடைகிறது. வஸ்துவின் எல்லையும் இறைவனிடமே முற்றுபெறுகிறது. உலகநலத்திற்குச் செய்யும் சேவை (அசம்பூதி), காரணபிரஹ்மத்தின் உபாசனையாகும்.

காரியபிரஹ்மத்தின்சேவை குறைந்ததாகும். ஏனெனின்? அதில் சுயநலமிருக்கிறது. தனக்கென்னும் இழிந்த பாவனை உள்ளது. உலகநலத்தை விரும்பாமல் தன்னுடைய தேசநலத்தை விரும்புபவன் உலகயுத்தத்தை உண்டுபண்ணுகிறன். தேசநலத்தைவிரும்பாமல். சாதி அல்லது சமுதாயத்திற்கு உழைப்பவன். வகுப்புக்கலவரத்தை உண்டுபண்ணுகிறன். சாதி அல்லது சமுதாயத்தைப் புறக்கணித்துவிட்டு குடும்பத்திற்கு உழைப்பவன் சுவார்த்தி (சுயநலமுடையவன்)

குடும்பத்திற்கும் உழையாமல் தன் வயிற்றைமட்டும் வளர்ப்பவன் பாமரன் அல்லது விஷயி. காரியபிரஹ்மத்திலோ அல்லது காரணபிரஹ்மத்திலோ மனதைச் செலுத்துபவன் கோர அக்ஞானக்குகையில் விழுகிருன். வியாபகத்தைவிட்டுப் பரிச்சின்னத்தை வழிபடுவது சம்பூதியில் இருப்பதாகும். பரிச்சின்னத்தைவிட்டு வியாபகத்தைஉபாசிப்பது காரணப்பிரஹ்மத்தில்இருப்பதாகும். பரமாத்மா அம்சமுமில்லை, அம்சியுமில்லை. இரண்டிற்கும் வேருகும். சாகாரத்தை (பிரபஞ்சத்தை) வழிபடுவதுந்தவறு, நிராகாரத்தை (மாயையை) வழிபடுவதும் தவறு. சாகார நிராகாரம் இரண்டையும் சாதனரூபமாகக் கொண்டுபோகவேண்டும்.

காரணபிரஹ்மத்தை வழிபடுபவர்க்கு சுவர்க்கமுதல் பிரஹ்மலோகம்வரை அடைவுஉண்டாகும், அவர்கள் பிரஹ்மாவை அடைவார்கள். ஆனல் அங்கும் பயம் இருக்கிறது. போகமிருக்கிறது. ஆயுள் உண்டு. மரணபயமுண்டு. ஆகையால் அந்தந்தமம் என்றது சுருதி. மூர்த்திபூஜையில்இருந்து விராட்டுபூஜைவரை எறும்புமுதல் பிரஹ்மா ஈருகஉள்ள பேதஞான பூஜையில் ஈடுபட்டு அத்வைத ஞானத்தையடைந்து ஆத்மாவைப் பெருதவரை அந்தந்தமமேயாகும். காரிய உபாசனை, தன்தேக உபாசனையேயாகும். தேகவழிபாடு போகமூலமாக ஜடத்தில்கொண்டுதள்ளும்.

பொ-உ. எவன் காரியபிரஹ்மத்தைமட்டும் உபாசிக்கிருனே அவன் அஞ்ஞான வடிவமான இருளில் மூழ்குகின்ருன். அதைப்பார்க்கிலும் மேலான இருளில் மூழ்குகின்ருன். யாரெனின்? காரண பிரஹ்மத்தை

மட்டும் எவன் வழிபடுகிருனே அவன் என்பது பொருள்.

13

பதின்மூன்ருவது மந்திரம்.

அன்யதேவாகு: சம்பவாத் அன்யதாகுர சம்பவாத். |
இதிசுசுரும தீராணும் யேநஸ்தத் விசசட்சிரே ||

ப-உ. சம்பவாத் = காரியபிரஹ்மத்தின் (பயன்) அன்யத்ரவஆகு: = வேருக்கூறுவார்கள். அசம்பவாத் காரணபிரஹ்மத்தின் (பயன்) அன்யத்ஆகு; = வேருக கூறுவார்கள் (இதை) இதி = இவ்வாறு, தீராணும் = தீரபுருஷர் இடத்தில், சுசுரும = கேள்வியுற்ருேம். தீரர் யார்? யேந: யார் எங்களுக்கு தத் = அதை. விசசட்சிரே = விரிவாகக் கூறியிருக்கிருர்களோ அவர்கள் தீரர் = ஞானிகள்.

வி-உ. சம்பூதி = காரியபிரஹ்ம உபாசனையின் பலன் வேறு. இது வெளிப்பட்ட உலகத்தின் விஷய மாக விளங்குகிறது. இதற்குப்பயன் அறியாமை, மயக் கம், விவேகமின்மை, துன்பம். அறியாமையால் வரு வது துன்பம், அறிவால் வருவது இன்பம். அசம்பூதி யின் பயன் வேறு. மனோராஜ்யம். தருக்கவாதமுதலிய விவாதங்கள். இவைகள்மூலமாகப் பயனற்றஎண்ணங் கள் வளரும். சுயநலமுடையவனுக்குப் பரநலம் தோன் றமாட்டாது. தன்னலத்தை நினைப்பவன் தகுதியற்றவ ஞவான். அறிஞன் வியவகாரம்அனைத்தும் பிறர்நலத் தின்பொருட்டேயாகும். "நல்லவனே கேள் உலகுபகா ரம் ஞானிகள் விவகாரம்" (கைவல்யம்) அருமைக்

குழந்தாய்! நீ கேட்பாயாக. ஞானிகள் ஞானத்தையு டையவர்கள். அறிவாளிகள் எதைச்செய்தாலும் உலக நலத்தின்பொருட்டே செய்வார்கள் தன்னலங்குறித் துச் செய்யார்கள் என்பது பொருள். "நாஞர்த்தே" (கடசுருதி) நாஞர்த்தம்=பின்னப்பிரயோஜனம். பிரே யத்திற்குப் பயன் வேறு சிரேயத்திற்குப் பயன் வேறு என்று நசிகேதாவுக்கு யமதருமர் கூறுகின்ருர். ஆகை யால் சம்பூதிக்கும் அசம்பூதிக்கும் பலன் அன்னிய மென்று அறைந்திருக்கிறது.

## 14

### பதினுன்காவது மந்திரம்.

சம்பூதிஞ்ச விஞசஞ்ச யஸ்தத்வேதோ பயம்சஹ|
விஞசேன மிருத்யும் தீர்த்வா சம்பூத்யாம் அமிர்த
மஸ்னுதே ||

ப-உ. ய=எவன். சம்பூதிஞ்ச விஞஞ்ச = காரிய பிரஹ்மத்தையும், காரணபிரஹ்மத்தையும் சேர்த்து வேத= அறிகிருஞே அவன் விஞசத்தால்காரணபிரஹ் மத்தால் அமிர்தத்வத்தை அடைகிருன். விஞசம்= நாசத்தோடுகூடிய அவஸ்தை. அது எதுஎனின்? கார ணப் பிரமம். அதுவே அசம்பூதி. காரணப்பிரமத்தின் வழிபாட்டால் (தேகாசக்தி) ஆசக்தியைக் குறைக்கி ருன். உடற்பற்றை தியாகம்செய்து விடுகிருன். உடம் பின் காரணங்களை நன்ருக விசாரம்பண்ணிப் பார்க் கின்றபோது வினையின்பயன், வித்தைப் பூமியில் விதைக்கின்றபொழுது அது பலனைத்தருகிறதல்லவா, அதுபோல் ஜீவன் வினையை விதைக்கின்றபொழுது தேகம் வருகின்றது. "வினைப்போகமே ஒரு தேகங்கண்

டாய்" என்று பட்டினத்து அடிகளார் கூறுகின்றார். இந்தத் தேகம் யாருக்கும் இருக்கப்போகிறதில்லை. எவ்வாறு தோன்றிய குடம் உடைகிறதோ, உடுத்தஆடை கிழிகிறதோ, சூடியமலர் வாடுகிறதோ, அதுபோல எடுத்த தேகம் அழியும். ஆகையால் இவ்வாறு விசாரஞ்செய்து, உடலில்வைக்கிற ஆசையைத் தியாகம் பண்ண வேண்டுமென்பது கருத்து. மனதின் வாயிலாக உபாசனைசெய்து, புத்தியின் வாயிலாக ஆத்ம அனாத்மவிவேகம் பண்ணி, அந்தக்கரணத்தை சுத்தி செய்து ஞானவாயிலாக அமிர்தத்தை அடைகிறான் என்னும் பொருள் கொள்ளலாம்.

வித்தை அவித்தையென்னும் மூன்று மந்திரம் உபாசனை விஷயமாகவும், சம்பூதி அசம்பூதியென்னும் மூன்றுமந்திரம் உபாஸ்ய விஷயமாகவும் கூறப்பட்டிருக்கிறது.

15

பதினைந்தாவது மந்திரத்திற்கு முன்னுரை—9வது மந்திரமுதல் பதினான்காவது மந்திரம்வரை கூறியுள்ள காரிய காரணப்பிரஹ்மங்களை நன்றாக வழிபட்டு அதன்மூலமாக உயர்ந்த நிலையை அடைந்து பரமேசுவரனிடம் தனது ஆவரணத்தை நீக்கும்பொருட்டுப் பிரார்த்திக்கின்றான்,

15

பதினைந்தாவது மந்திரம்.

ஹிரண்மயேன பாத்ரேண சத்யஸ்யஅபிஹிதம்முகம் ।
தத்த்வம்பூஷன்அபாவிர்ணுசத்யதர்மாயதிர்ஷ்டயே॥5

ப-உ ஹிரண்மயேன = தங்கமயமான. பாத்

ரேண = பாத்திரத்தினுல். சத்யஸ்ய = பரமாத்மாவினுடைய. முகம் = துவாரம். அபிஹிதம் = மறைந்திருக்கிறது. தத்துவம் = நீ, ஹேபூஷன் = ஹேசூரிய! அபாவிருணு = திறப்பாயாக, சத்யதருமாய = சத்ய தருமத்திற்காக, திருஷ்டயே = தரிசிப்பதற்காக.

வி-உ. ஹிரண்மயேன பாத்ரேண = பாத்ரம், பீயதேஅனேன இதிபாத்ரம்என்பது இலக்கணம். எதனுல் நீர் முதலிய ரசங்களைப் பருகுகின்ருேமோ அது பாத்திரம் எனப்படும். எதிலிருந்து கருமத்தின் சுவாது, கருமத்தின் பலன் அனுபவிக்கப்படுகிறதோ அது பாத்திரம்என்று கூறப்படுகிறது. தான்யக்களஞ்சியத்தில் தான்யமிருப்பதுபோல எல்லா ஜீவர்களுடைய கரும சம்ஸ்காரம் எதனிடத்தில் இருக்கிறதோ அந்தப் பாத்திரம் ஹிரண்யகர்ப்பனுவர். சமஸ்டியின் சம்ஸ்கார ரூபப் பாத்திரந்தான் ஹிரண்யப் பாத்திரமெனப்படும்.

இரும்பு வெள்ளிமுதலிய தாதுக்கள் அக்கினியில் எரிந்து சாம்பராகிவிடுகின்றன. தங்கம் வெந்து நீருகிறதில்லை. ஆகையால் அந்த சம்ஸ்காரப்பாத்திரம் தங்கமயப்பாத்திரம் என்று சொல்லப்படுகிறது. ஹிரண்மய பாத்திரம்என்று கூறுவதற்குத் தாத்பரியம் அது தாஞகநசிக்கிறதில்லை. சமஷ்டி சூரியன், சமஷ்டி வாயு, சமஷ்டிஅஹம், இவைகளின் உதயாஸ்தத்திற்கு, அதுவே பாத்திரம் அல்லது அதுவே ஸ்தானமாகும்.

எல்லாருடைய கருமங்களும், எல்லாருடைய வாசனைகளும் எல்லாருடையஅஹம் வாசனைகளும், எல்லாருடைய சம்ஸ்கார பீஜங்களும், அந்தப் பாத்திரத்தில் அடங்கியிருக்கின்றன. விஸ்வசிருஷ்டிக்குரிய வித்துக்.

கள் அனைத்தும் ஹிரண்மய பாத்திரத்தில் திடமாக வைக்கப்பட்டிருக்கிறது. உலகத்தில் நிலமுதலிய இடங்களில் விதை விதைப்பதற்குவைக்கப்பட்டவிதை கள் உரியகால நேரங்களில் விதையாதுபோனுல் அந்த விதைகள் உளுத்துப்போகின்றன. அல்லது பூச்சிகள் விழுகின்றன. அல்லதுகெட்டுப்போகின்றன. மீண்டும் முளைப்பதற்குத் தகுதியற்று விடுகின்றன. அதுபோல இந்த ஹிரண்மயபாத்திரத்தில் வைக்கப்பட்ட பீஜங் கள் அவ்வாறு அன்று, இந்த ஹிரண்மயரூபபாத்திரம் அனுதிகாலமாகஎல்லோருடையகர்மங்களைத் தாரணை செய்துகொண்டு இருக்கிறது. பிரவாகரூபமாக அனந்த காலம்வரைத் தாங்கிக்கொண்டிருக்கும். எந்தெந்த ஜீவர்களுடைய கர்மங்கள், வாசனைகள் நசியாமல் இருக்குமோ அந்தந்த ஜீவர்களுக்கு சிருஷ்டி வந்து கொண்டேயிருக்கும். வேரிருக்கும்வரை முளை கிளம் பிக்கொண்டு இருப்பதுபோல.

மேற்கூறியபாத்திரம் ஹிரண்மயமல்லவா. ஆகை யால் அதில் பிரகாசமிருக்கிறது. சத்தையிருக்கிறது, பிரியத்வமும் இருக்கிறது. கண்ணில் ஒளி அக்னியில் தேஜஸ், சூரியனில் சுடர் இவையெல்லாம் ஹிரண்மய பாத்திரத்திலிருந்துவந்திருக்கின்றன. எல்லோருடைய புத்தியும் அங்கு இருந்துதான்வந்திருக்கிறது. யானை, பூனை, பாம்பு, பல்லி, பசு, பக்ஷி, ஈ, எறும்பு. சுரன், நரன், அசுரன் ஆதியெல்லாருடைய புத்தியும் ஹிரண் யகர்பனிடமிருந்துதான் வந்திருக்கின்றன.

அஹம் இருவகையெனப்படும். ஒன்று அத்யாச விருத்தியால், மற்ருென்று அத்யாரோபிதவிருத்தியால்.

நான்தேகம், நான்பிராணி, இந்த அஹம், அத்யாச விருத்தியால் வந்தது, இதற்குத் தாத்பர்யம் தேகத்தி லும், பிராணிகளிடத்திலும் நான் என்னும் அபிமான முண்டாயிற்று. குழந்தைகளுக்குக் கற்பிக்காதுபோனு லும் வயது வர வர இந்த அத்யாசமுண்டாகும். நான் மனிதன், நான் தேகம் என்று யாரும் சொல்லாமலே உண்டாகும். நான் ஹிந்து, நான்பிராஹ்மணன், நான் பாரதீயன் என்பதெல்லாம் இரண்டாவது அத்யாரோ பித அத்யாசத்தால்வந்த அபிமானமாகும். இது படிப் பிக்காமல் வரமாட்டாது. ஆகையால் நான் மனிதன் என்பது அத்யாரோபித அஹம்ஆகும். எது இயற்கை யாகவே தோன்ருமல் பின்னுல் யாராலும் கூறப்பட்டு உண்டாகிறதோ அது அத்யாரோபித அகம் எனப் படும்.

நான் சந்நியாசி. நான் வித்வான், நான் வானப் பிரஸ்த்தன் என்பனஎல்லாம் பின்னுல் உண்டானவை களேயாம். அனுதி அஞ்ஞான அனுசிருதவிருத்தியால் அத்யாசஜன்ய அகம் உண்டாகிறது. இதைப்போக் கும்பொருட்டு விவேகம், வைராக்யம், அறிவு முதலிய சாதனம்வேண்டும். சாதனம் சாவதானமென்பது ஒரு பொருள். இதற்காக ஆசாரம், ஒழுக்கம், அந்தகரண சுத்தி‘ குருகிருபை, ஸாஸ்த்ரகிருபை, இவையெல்லாம் வேண்டும். இதுமூலமாக அத்யாரோபிதப் பிரஹ்மா காரவிருத்தியுண்டாகிறது. இத்த விருத்தியால் கற்பித அத்யாசத்தைத் தடுக்கலாம். பிரவிருத்தி வேகமும் குறையும். வாழ்க்கையில் ஜீவமுக்தனுகவில்லை. நான் ஹிந்து, நான் பாரதீயன் என்னும் அத்யாசத்தோடு

இறந்துபோனாலும் அத்யாரோபிதபீஜம் அங்கும் நசிக்கிறதில்லை. ஆனாலும் அவன் பிறக்கும்போது அதுவும் கூடவே பிறந்து அவனை நிவிருத்திவழியிற் கொண்டு போகும். பிறகு குருவாயிலாக ஞானத்தை யுண்டு பண்ணி முக்தனாக்கிவிடும்,

ஹிரண்மயபாத்திரம் — அதாவது ஹிரண்யகர்பனிடத்தில் மூன்றுவிதமானபீஜமிருக்கின்றன. சத்பாவ பீஜம், சித்பாவபீஜம், ஆனந்தரூபபீஜம். சத்ரூபபீஜத்தில் ஆகிருதி அதாவது வடிவரூபபீஜம் இருக்கிறது. இதில் இருந்துதான் எல்லாவுயிர்களுக்கும் வடிவங்கள் உண்டாகின்றன. இந்தபீஜமே ஜன்மத்திற்கும்மரணத்திற்குங் காரணமாகின்றது. ஏனெனின், ஜன்மம் மரணம் வடிவத்திற்குத்தான் உண்டாகிறது. சித்பாவ பீஜத்தில் புத்தியின் பீஜமிருக்கிறது. இது ஜடத்வம் மூடத்வம் முதலியவைகளுக்குக் காரணம். எல்லாப் பிராணிகளுக்கும் இதிலிருந்துதான் பிரகாசம்உண்டாகிறது, புத்தியுண்டாகிறது. இதனால் உயிர்களுக்கு ஒளிகிடைக்கிறது. 'ஆனந்தரூபபீஜத்தில் பிரியத்வம் இருக்கிறது. அதுமூலமாக ராகத்வேஷத்திற்கு விரிவு உண்டாகிறது. ஹிரண்யகர்பனிடத்தில் இவ்விதமான பீஜங்கள் இருக்கின்றன. இந்த பீஜங்களோடுகூடிய பிரஹ்மமே ஹிரண்யகர்ப்பன். சித்திருஷ்டியில் வியாகிருத அவஸ்தாரூப ஹிரண்யகர்ப்பன் இருக்கிறான். அவ்யாகிருத அவஸ்தையில் அவனே ஈசுவரனெனப்படுவான். ஜடதிருஷ்டியில் வியாகிருத அவஸ்தை மஹத்தத்வம் எனப்படும். வியாகிருதமென்னும் சொல்லுக்குப் பொருள். விவிதாகாரம் அல்லது நானாகாரம்

ஆகும். ஈசுவரனுக்கு அந்தரியாமிரூபம் சிருஷ்டிகாலத்தில்மட்டுந்தான். ஏனெனின்? சிருஷ்டியிருந்தால்தான் அந்தரியாமியாகவோ அல்லது நியந்தாவாகவோ இருக்கமுடியும். பிரளயகாலத்தில் ஈசுவரத்வமட்டும் இருக்கிறது. ஹிரண்யகர்ப்பனில் கருத்ருத்வமும் ஈசுவரத்வமுமிருக்கிறது. ஈசுவரனிடத்தில் சிருஷ்டிப்பிரளயத்திற்குப் பீஜமிருக்கிறது. பிரஹ்மத்தில் அது இல்லை. ஆகையால் அதில் சிருஷ்டியுமில்லை, பிரளயமுமில்லை. பிரஹ்மம் நிர்பீஜம், நிர்விஸேஷம், நித்யம், ஏகரசம், அபரிச்சின்னம், சத்தாரூபம். அதை சாக்ஷியென்றும் சாக்ஷியமென்றும்கூறுவது அறியாமையாகும். ஸாஸ்த்ரத்தில்அத்யாசத்தினுல்சாக்ஷியென்றும் சாக்ஷியமென்றும் கூறியிருக்கிறது. வாஸ்தவத்தில் அன்று. "அஜகல்பிதஸம்விருத்யாபரமார்த்தேன நாப்யஜ:" என்பது சுருதி. கற்பித விருத்தியால் ஆத்மாவை அஜன் என்றும், அமரணன் என்றும், சொல்லப்படுகிறது. அந்த ஆத்மா சத்யத்திற்கும் சத்யம்.

சத்யம் மூன்றுப்பிரகாரம்–(1) பிராதிபாசிகசத்யம், (2) வியாவகாரிக சத்யம் (3) பாரமாரித்திக சத்யம். கற்பிதசத்யம் பிராதிபாசிகமெனப்படும். கயிற்றரவு போல. இரண்டாவது, பிரபஞ்சம் வியாவகாரிகசத்யம் எனப்படும். கயிறுபோல. உணவு, உடை, இடம் இவையெல்லாம்வியாவகாரிகமெனப்படும். மூன்ருவதுசத்யம் பாரமாரித்திகம். அதுசேதனப்பிரஹ்மம். பிராஹ்மணத்வம், சந்நியாசித்வம், ஜீவத்வம், இத்யாதி எல்லாம் கற்பிதசத்யமாம். இந்தமாதிரியெல்லாவிதமான கற்பித சத்யங்களை விசாரத்தால் நீக்கமுடியும். கர்த்ருத்வ

போக்திருத்வமிரண்டும் கற்பிதசத்யமாகும். கர்த்ருத்வத்தைவிட்டு தன்னை அகர்த்தாவாக நினைக்கின்றபோது வைராக்யமுண்டாகிறது. வைராக்யமுண்டான பிறகு சந்நியாஸம்பண்ணவேண்டுமென்பது ஸாஸ்த்ரத்தின் ஆதேஸம். அதாவது முறை. "யதஹரேவ விரஜேத் தகஹரேவ பிரவிரஜேத்" (சுருதி) எப்பொழுது வைராக்யமுண்டாகுமோ அப்பொழுது சந்நியாஸம் பண்ணிக்கொள்ளவேண்டும் என்பது சுருதியின் பொருள்.

வைராக்யமில்லாத முயற்சியுண்மையை மறைக்கும். ஹிரண்மயபாத்திரமூலமாக சத்யத்தின்வாயில் அடைபட்டிருக்கிறது. ஹிரண்மயபாத்திரம்என்பதற்கு வேறொரு அர்த்தமுமுண்டு. பொன், பொருள், பெண்டிர் பிள்ளைகள் என்பனவெல்லாம் ஹிரண்மயபாத்திரமெனப்படும். சத்யம் மறைபட்டிருக்கிறது. பொருளுக்காகத் தனவந்தனைப்பண்டிதனென்றும், தார்மிகனென்றும், குணவானென்றும், கூறுவார்கள். பெரியபதத்திலிருக்கும் அதிகாரி தனக்குத் தெரியாதவிஷயத்திலும் தெரிந்ததாகக் கூறிக்கொள்கிறார்கள். பொருளினால் நியாயம் விளங்குகிறதில்லை.

பாம்பின் கடியிலிருந்து பரீஷித்தைக்காப்பதற்கு கஸ்யபன்என்னும் பிராஹ்மணன் நாகயஞ்ஞத்திற்குச் சென்றான். வழியில் தக்ஷகன் என்னும் பாம்பு, கஸ்யபனைபார்த்து நீ எங்கேசெல்கிறாய் என்று வினவினான். கஸ்யபன், நான் பரீக்ஷித்து, நாகயஞ்ஞம் வளர்க்கின்றான் அங்குசென்றுஅவனைக்காப்பதற்காகப்போகிறேன் என்றான். தக்ஷகன் உனக்கு என்னகிடைக்கும் என்று

கேட்க. கஸ்யபன் பணங்கிடைக்கும் என்று கூற நாகம் அதை நான்தருகிறேன் என்று பலவிதரத்தினங் களைக்கொடுத்து கஸ்யபனைத் திருப்பிவிட்டது. கஸ்ய பனும் பொருளை வாங்கிக்கொண்டு வீடுதிரும்பினன். இது ஒரு இதிகாசம். தாத்பரியம்—கஸ்யபனுடைய உண்மையறிவு தனத்தால் மறைபட்டுவிட்டது.

"சத்யமபிஹிதமுகம்" அபிஹிதத்திற்கு அர்த்தம் மறைத்தல். பிதானம், அபிதானம் என்னும் சப்தத்திற் கும் மறைத்தல் என்பதுதான் பொருள். சத்யம் - பர மாத்மா. பரமாத்மாவை அடைவதற்கு முகம்=முக் யம். அது எது? சத்யம். அதுவே வாயில். வாயில் அடைபட்டால் உள்ளேநுழையமுடியாதல்லவா. சத்ய தரிசனம்—விவேகம், வைராக்யம் ஷட்சம்பத்தி, சிரவ ணம், மனனம், நித்தியாசனம் இவைகள் மூலமாக உண்டாகிறது. கர்மத்திலும், அதனல் உண்டான ரசத்திலும், அதன்மூலமாக விளைந்த சுகத்திலும் இச் சையுண்டானதால் அது மறைபட்டிருக்கிறது. ஜன்மம் நீங்கப்படாதென்பதனல் அஞ்ஞானத்தில் ஆசை யிருக்கிறது என்பதுதானே அர்த்தம். உலகத்தில் உள்ள வார்த்தைகளைகேட்கவிரும்புகின்றோம். ஆனல் நம்மைப்பற்றிய வார்த்தைகளைக் கேட்க விரும் புகிறதில்லை. இதனல் உலகத்தை விரும்புகிறோம். ஆத்மாவை விரும்பவில்லை என்பதுதானே பொருள். அறிவாளியாகவேண்டுமென்று நினைக்கிறோம். இத னல் ஞானத்தில் விருப்பம் இருக்கிறது என்பது தெரி கிறது. பகையைவிட விரும்புகிறதில்லை. இதனல் அஞ் ஞானத்தில் விருப்பு இருக்கிறதென்று தெரிகிறது.

இந்தமாதிரி ஆனந்த திருஷ்டியால் போகத்தில் இச்சையும் சித்தின் திருஷ்டியால் ஞானத்தில் இச்சையும், சத்தின் திருஷ்டியால் வாழவேண்டுமென்ற இச்சையும் இருக்கிறது என்பது தெளிவாயிற்று. இந்த மூன்று இச்சையும் ஆத்மாவிற்கு மறைப்பாகும். இது மூலமாக காமம் லோபம் மோகம் குரோதம் இவையெல்லாம் வந்துவிடுகின்றன. இவைகளின் காரணமாகத்தான் விவேகவைராக்ய முதலிய சாதனமுண்டாகிறதில்லை. "தத்வம்பூஷன் அபாவ்ருணு" "சத்யம் பரமாத்மதத்வம்." "அநேஜத்ஏகம்" "ததேஜதி" "சபரியகாத்" ஆதிமந்திரமூலமாக எதை வர்ணிக்கப்பட்டிருக்கிறதோ அந்த ஆத்மா சத்யம் எனப்படும். 'பூஷன்' புஷ்யதீதிபோஷ்டா. எல்லோர்க்கும் ஒளி கொடுக்கும் பரமாத்மா என்பது பொருள். அன்னை குழந்தைகளுக்கு அன்னம்முதலியசாதனத்தால்போஷணம் செய்கிருள். தந்தை அறிவைவளர்க்கும் போஷகன். மனைவி ஆனந்தத்தை அளித்துக் கணவனை போஷிக்கிருள். ஆனுல் இவர்கள்எல்லாம் பரிச்சின்ன போஷ்டாக்கள். ஒரு அளவுக்கு போஷணம் செய்வார்கள் என்பது பொருள். உண்மையான போஷகன் பரமேஸ்வரன்தான். போஷிப்பதும் அனுக்ரகிப்பதும் பூஷனுக்கு ஆகும், பூஷன் என்னும் சொல்லுக்குப் பொருள் பரமாத்மா, குரு. சூரியன் அல்லது இந்திரன். நம்முடைய குரு அல்லது இஷ்டதெய்வம் அல்லது பரமாத்மா இவர்களிடத்தில் நாம் பிரார்த்தனை செய்ய வேண்டும். எப்படிச் செய்யவேண்டும் எனின்,

ஏ பிரபோ! ஹே பரமாத்மன்! ஹே சர்வசமர்த்த! இந்த ஹிரண்மயபாத்திரமானமறைப்பைநீக்குவாயாக,

ஹே பெரியோனே! உனதுபேரொளியால் எனதுபெரிய இருளை அகற்றுவாயாக என்று வேண்டிக்கொள்ள வேண்டும். பிரார்த்தனை—பிரகிருஷ்டவஸ்து யாசனை, உயர்ந்தபொருளை யாசிக்கவேண்டுமென்பது பொருள். கற்பகத்தைச் சார்ந்தும் தரித்திரத்தை விரும்பப்படா தல்லவா? "தமசோமா ஜோதிர்கமய" = ஹேபகவன்! இருளிலிருந்து என்னை பிரகாசத்திற்கு கூட்டிச்செல், என்பது சுருதியின் பொருள். மேற்கூறிய ஆவரணத்தை வியஷ்டி ஜீவன் விலக்கிக்கொள்வதில் அசமர்த்தன். ஆகையால் ஆண்டவனிடத்தில் தனது மறைப்பை நீக்கிக்கொள்வதற்குப் பிரார்த்தனை செய்கிறுன். பூஷன் என்பதற்கு ஞானத்தை உண்டுபண்ணுபவன் என்பதும் பொருள். "சுவஸ்திநः பூஷா விஸ்வவேதா:" (வேதம்) எதிலிருந்து எல்லாஞானமும் உலகத்திற்குக் கிடைக்கிறதோ எல்லா ஞானமும் எதில் இருக்கிறதோ அது பூஷா. அதுவே சூரியன் கதிசீலன். பிரகாசகன், போஷகன் எல்லாம் ஒரு பொருளே யாகும்.

இங்கு பிரயோஜனமும். அதிகாரியும் வர்ணிக்கப் படுகின்றன. பிரயோஜனம் சத்யதரிசனம். அதிகாரி சத்யதருமா. சத்யரூப தருமம் யாரிடமிருக்கிறதோ அவன் என்பது பொருள். சனுதனதருமத்தில் சத்யந் தான் உயர்ந்ததருமம். சத்யத்தைத்தவிர எதையும் நாங்கள் தருமமாகக்கொள்கிறதில்லை. சாதிதருமம், சம்பிரதாயதருமம், குலதருமம், வர்ணதருமம், ஆசாரிய தருமம், உயர்ந்தபதவியாளர்களால் கூறுந்தருமம் முதலிய இன்னும் பலவித தருமங்களை தருமமென்று நாங்கள் ஒப்புக்கொள்கிறதில்லை. சத்யம். காலத்தாலும்,

தேசத்தாலும், வஸ்துவாலும் மாறுகிறதில்லை. தரிச னம்=சாக்ஷாத்காரம். (திருஸ்) பிரேக்ஷணே என்னும் வினைப்பகுதி. இதற்குப் பொருள்—சத்யத்தை நமது சொரூபமாக அறிதல். சத்யதருமதரிசனம்—பிரயோ ஜனம். சத்யதருமா—அதிகாரி ஹிரண்மயபாத்திரம் ஆவரணம் அதாவது மறைப்பு. அதை இஷ்டதெய்வ மூலமாக அகற்றவேண்டும். ஏனெனின்? நம்மால் அதை அகற்ற முடியாது. சத்யதருமாய, திருஷ்டயே யென்று இரண்டையும் ஒன்றுகசேர்த்து சத்யதரும தரிசனத்திற்காகவென்று பொருள்கொள்ளினும் அமை யும். சத்யாய தருமாய திருஷ்டயேயென்று பதத்தைப் பிரித்து—சத்தியாய=சத்ரூப தருமாய=ஆனந்தரூப திருஷ்டயே=ஞானரூபம். சச்சிதானந்தரூப பிரஹ்மத் தையடைவதற்கு ஹே பூஷன்! ஹிரண்மயபாத்திரரூப ஆவரணத்தைஅகற்றுவாயாகவென்றுபொருள்கொள் ளின் உத்தமமாகும்.

### 16-வது மந்திரத்தின் அவதாரிகை.

முந்திய மந்திரத்தில் பிரார்த்தனை செய்திருக்கி றது. வரும் மந்திரத்தில் சூரியனிடத்தில் மீண்டும் ஹிரண்மயபாத்திரத்தின் விளக்கமும் அதை நிவிருத் திக்குமுபாயமும் வேண்டப்படுகிறது.

### 16-வது மந்திரம்.

பூஷன்னேகரிஷேயமசூரிய பிராஜாபத்ய, வ்யூஹ
ரஸ்மின்சமூஹ ||
தேஜோயத்தேரூபம் கல்யாணதமம் தத்தேபஸ்யா
மியோஸாவஸௌபுருஷா சோஹமஸ்மி: ||

ப-உ. ஹே பூஷன் = சூரிய! ஏகரிஷே = தனியாகச்செல்பவனே. யம = எவ்வுயிரையும் வசப்படுத்துபவனே. பிராஜாபத்திய = பிரஜாபதிநந்தன. தே = உன்னுடைய = எந்த. தேஜோரூபம் ஒளிமயமானதும். கல்யாணதமம் = மங்களவடிவம். ரஸ்மின் சமூக = கிரணக்கூட்டங்களை. வ்யூஹ — ஒதிக்கிக்கொள்வாயாக (எதன்பொருட்டோவெனின்!) உன்னுடைய மங்கள சொரூபத்தை, பஸ்யாமி = பார்க்கும்பொருட்டு. யோஸாவஸௌ புருஷ: = இந்த ஆதித்யமண்டலஸ்த்தப் புருஷன் நானாக இருக்கிறேன்.

வி-உ. எல்லோரையும் போஷிக்கும் சூரியன்— தேகத்தையும், இந்திரியத்தையும், மனசையும், புத்தியையும், போஷணைசெய்பவன் என்பது பொருள்.

ஹிரண்யகர்ப்ப: சமவர்த்ததாக்ரே பூதஸ்யஜாத: பதிரேகஆசீத் |
ஸதாதாரபிருத்விம் த்யாமுதேமாம் கஸ்மைதேவாய ஹவிஷாவிதேம ||

(இது வேதம்) எல்லாப் பிராணிகளுக்குந் தலைவனும், ஹிரண்யகர்ப்பனும், இஹபரம் இரண்டையும் உண்டுபண்ணி அதை தாரணைசெய்பவனும், எவ்வுயிரையுங்காப்பவனும் பரமேஸ்வரன் என்பது மேற்கூறிய மந்திரத்தின் பொருள். ஏகரிஷே என்னும் இந்த பதத்தில் ஹிரண்யகர்ப்பன், பிரபஞ்சம் பிரஹ்மம் இம்மூன்றையுஞ் சேர்த்துக்கொள்ளலாம். பிரஹ்மத்தில் ஏகத்வம் குணமன்று, பின்னை அத்வயமென்பது பொருள். ஏகத்வம் குணமானல் சங்கியா அதாவது எண்ணாகை ஆகிவிடும். அது வேதாந்தத்திற்கு இஷ்டமன்று.

எண் குணம், குணகுணிபாவம் பிரஹ்மத்தில் இன்று. பிரஹ்மம் நிர்க்குணம், சம்சாரம், சகுணம். "நிர்க்குணம் நிஷ்க்கிரியம்" என்பது சுருதி. எல்லாம் சேர்ந்தது பிரபஞ்சம். ஒன்ருகச்சேர்ந்தது ஹிரண்யகர்ப்பன்? நாமரூபம் வெவ்வேறு, அந்தக்கரணம் வெவ்வேறு. தேஹேந்திரியம் வெவ்வேறு. ஆனுல் பிரஹ்மதிருஷ்டியில் எல்லாம் ஒன்றேதான். ஏகம்என்பதற்கு முக்யார்த்தம் ஈஸ்வரன். லட்சியார்த்தம் பிரஹ்மம். "ரிஷே" = ஞானசொரூபன். சூரியன் பிரகாசசொரூபரானதால் ஞானிஎன்பது பொருள். "தியோயோந: பிரசோதயாத்" என்று சவிதாதேவனிடம் பிரார்த்தனை செய்யப்பட்டிருக்கிறது, ஹிரண்யகர்ப்பன் அந்தக்கரண சமஷ்டிக்குப் பிரகாசகன். ஆகையால் அவரை ஞானியென்றும், சவிதாவென்றும், சூரியன் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

முந்திய மந்திரத்தில் ஹிரண்மயபாத்திரரூப ஆவரணத்தை நீக்குவதற்காகப் பிரார்த்தனை செய்யப்பட்டது. இந்த மந்திரத்தில் "வ்யூஹரஸ்மின் சமூஹ" இதற்கு தாத்பரியம் சூரியகிரணந்தான் ஹிரண்மய பாத்திரம். இதுவே மறைப்பு. ரஸ்மி — வாசனையின் கூட்டம். இறைவா! வாசனுஜாலத்தை விரட்டுவாயாக. இதை நீக்காமல் ஆத்ம சாக்ஷாத்காரமுண்டாக மாட்டாது. கிரணங்கள் நூல்போல நீளமாக இருப்பதால் ரஸ்மியென்று கூறப்படுகிறது. வாசனு சமூகந்தான் பந்தத்திற்கு ஹேது. சிதாபாசரூபியாகிய ரஸ்மி திருஸ்யங்களில் யான் எனது என்னும் அகந்தை மமதையை வைத்துத் தன்னை பந்தித்துக்கொள்கின்றது.

"தம்வித்யாகர்மணீ சமாரபேதே பூர்வபிரஞ்ஞாய" (பிருகதாரண்யம்) நம்மிடத்தில் அறிவு இருக்கிறது. நாம் கர்மத்தை செய்கின்றோம். முந்திய சம்ஸ்காரமும் நமது அந்தக்கரணத்தில் பின்ன-பின்னமாக இருக்கிறது. ஞானம், கர்மம், சம்ஸ்காரம் மூன்றினுல்தான் அந்தக்கரணம் விளங்குகிறது. படித்துக் கேட்டு, அதன்பிறகு அறிந்து, கர்மத்தைச் செய்கிறோம் அல்லவா. அந்தசம்ஸ்காரம்மனதில்தானேவிழும். சம்ஸ்காரத்தால் சம்ஸ்கிருதப்பட்டதேமனம். கலரினுல் வஸ்த்ரம் எவ்வாறு ரங்கீனமாகிறதோ அதுபோல சம்ஸ்காரத்தினுல் மனம் ரங்கீனமாகிறது. சிதாபாசன் ஸம்ஸ்காரம், ரஸ்மிரூப கிரணங்களனைத்தும் தோன்றுமிடம் ஹிரண்யகர்பனேயாவன். ஹிரண்யகர்பனிடமிருந்து உண்டான ஸம்ஸ்கார கிரணங்கள் ஜடத்தை சேதனம்போல காட்டுகிறது. சூரியகிரணம் அரசிலையில்பட்டதும் அந்த இலை தங்கம்போல மிளிர்கின்றதல்லவா. ஹிரண்யகர்ப்பன்ரிஷி = மந்திரதிருஷ்டா. அவன்தான் சிருஷ்டிக்கு ஆதியில் மந்திரங்களைத் தரிசித்து உச்சாரணஞ்செய்து ஒவ்வொரு அந்தக்கரணத்தையும் பிரகாசிக்கச்செய்தான். "யமி"-நியந்தா-சாஸகன்—ஆணையிடுபவன். சிருஷ்டிகாலத்தில் ஈசுவரன் நியந்தாவாக ஆகிறுர். வண்டியிருந்தால்தான் நடத்துபவன் வேண்டும். அதுபோல உலகமிருந்தால் நடத்துபவன் தேவை. சிருஷ்டிகர்த்தா நாமரூபத்தை நிர்வாகம்பண்ணுபவர். சூரியன் = சூரீபி: கம்யதேஇதி சூரியன். ஞானிகளால் அறியப்படுபவன்என்பது பொருள். பரமாத்மா என்பது கருத்து. "பிராஜாபத்ய" பிரஜாபதிக்குப்பிரியமுள்ளவன். எவன் பிரஹ்மாவுக்கு முதல் முதல் ஞானத்தையளித்தானே அவன்.

யோவை பிரஹ்மாணம் விததாதி பூர்வம்.
யோவை வேதாம்ஸ்சப் பிரஹ்ணோதி தஸ்மை|
தம் தேவம் ஆத்மபுத்திப் பிரகாசம்
முமுக்ஷுர்வை சரணம் அஹம் பிரபத்யே ||

இ-ள். யார் பிரஹ்மாவை முதலாவது உற்பத்திப்பண்ணினரோ, அவர்க்கு ஞானத்தைக் கொடுத்து ஆத்மதத்வத்தைப் பிரகாசிப்பிக்கின்றரோ, அவரை முமூக்ஷுவாகிய நான் சரணாகதியடைகிறேன் என்பது மந்திரத்தின்பொருள். வியூஹரஸ்மின் சமூஹ-(ரஸ்மிகளை) கிரணங்களை ஒதுக்குவீராக. நானாஜீவர்களாகத் தோன்றுவதற்குக் காரணம் இந்த ரஸ்மிகள்தான். வாசனையால்ஒருவன் அநேகமாகத்தோற்றுகிறன். அந்தக் கரணபேதத்தால் அநேகவிதமான தோற்றமுண்டாகிறது. வாசனையையும் அந்தக்கரணத்தையும் முடுக்கும்போது தனது சொரூபம் வெளிப்படுகிறது. விஸ்வன்தான் வைஸ்வானரன். இதனல் ஜீவன்தான் ஈசுவரன் என்பது பொருள்.

கண்ணாடியின்பேதத்தால் பிரதிபிம்பபேதம். அதுபோல் அந்தக் கரணபேதத்தால் நானாஜீவபேதங் காணப்படுகிறது. சிதாபாசனில் காணப்படுகிற பேதம் அந்தக் கரணத்தின் பேதமாம். அந்தக்கரணத்தின் நானாத்வம் சிதாபாசனின் நானாத்வமாகக் காணப்படுகிறது.

“உபாதியால்வருபேதமே யிவர்பேதமன்றுரு”(சசிவண்ணபோதம்) இவர்பேதம் = ஜீவேஸ்வரர்கள்பேதம், உபாதியால் வருபேதம் = உபாதியால் அதாவது அவித்யா அந்த கரணபேதத்தால்வரும். உரு அன்று =

சொரூபத்தால் வந்ததன்று. "தேஜோயத்தே ரூபம் கல்யாணதமம்" இங்குதே யென்னும்பதம் இரண்டுமுறை வந்திருக்கிறது. தே=(இறைவா!)உனது திருவருளால் உன்னுடைய ரஸ்மிகளை நீயேஒதுக்கு. உனது திவ்ய ரூபத்தைக் காட்டவேண்டுமென்பது பொருள். தே= உன்னுடையசர்வமங்கலபிரஹ்மரூபத்தை "பஸ்யாமி" பார்க்கிறேன் என்பது இரண்டாவது தேக்கு அர்த்தம். "சக்ஷுஷ: சக்ஷு:" "பிராணஸ்ய பிராண:" நேத்திரம், காது, மனம், புத்தி, சித்த முதலிய எல்லாக் கரணங்களுக்கும் ஒளிகொடுக்கும் உனதுரூபம்என்பது பொருள். பரமேசுவர பம் கல்யாணதமம். ஜராமரணமற்றரூபம். நவம்—நவம். எப்போதும்புதிதானரூபம். சேதனத்தில் மேற்கூறிய வாசனுஜாலம் நீங்கிவிட்டது. ஆகையால் சுத்தசேதனரூபத்தைப் பார்க்கிறேன் என்பது பொருள்.

அதை யெப்படிப்பார்க்கிருய் எனின்? இதம்ரூபத்தை அகம்ரூபமாகப் பார்க்கிறேன் என்பது கருத்து. ஹிரண்மயபாத்திரத்தை விலக்கியபிறகு அதாவது கிரணங்களை நீக்கியபின்னர் எஞ்சியிருப்பது தேஜோமயம். அதாவது ஞான பம். அதுவே புருஷதத்வம். பூரணத்வாத்துபுருஷ: என்பது இலக்கணம். புரிஸயத்வாத்து:புருஷன் என்றுங்கூறலாம். புரூணி சேதி இதி புருஷ: புரங்களை அதாவது அந்தக்கரணத்தை உடைத்து அநேகத்வத்தை நீக்கி ஸ்திரமாக இருப்பதால் புருஷனென்று ஆத்மா கூறப்படுகிறது. அசௌ என்பது இருமுறை வந்திருக்கிறது. ஒருமுறைவந்தால் சூரியமண்டலத்திலிருக்கும் புருஷனை நமது சொரூபம் என்று கூறலாம். இருமுறைவந்தால் ஒவ்வொரு நாமரூபமான பொருள்களில் இருக்கும் புருஷனைக் குறிக்

கிறது. பசு பக்ஷி மரம் செடி கொடி மலை வனம் காடு கரை முதலிய எறும்புமுதல் துரும்புவரை வியாபித் திருக்கும் சேதனம் நமதுசொரூபமென்று அறியவேண் டும். அதிலிருந்து நான் வேறன்று. இதில் அதற்குப் பிரதானம் இருக்கின்றது. என்னை விட்டு அது வேறன்று. இது கேவலம் இதில் நான் என்பதற்கு பிர தானமிருக்கிறது. எதை நான் பின்னம் என்று நினைத் தேனோ அந்தப்புருஷன் நானாக இருக்கிறேன் என்பது பொருள். "சோஹம் அஸ்மி" என்னும் சொல்லுக்குப் பொருள் இதுதான்.

## 17வது மந்திரத்தின் அவதாரிகை.

இதுவரை சுத்த ஞானத்தை கூறி இருக்கிறது. அது அல்லாமலும் அதற்கு உபயோக சாதனங்களும் தர்ம தர்ம அனுஷ்டானங்களும் வர்ணிக்கப்பட்டிருக் கின்றன. பிரஹ்மஞானத்தையும் அதன் சாதனங்களை யும் அடையாதமக்கள் ஆத்மகாதியென்று கூறப்பட் டிருக்கிறது. பிரம்மத்தையும்ஆத்மாவையும்ஒன்றுஎன் றும், ஜீவன்முக்திவிலக்ஷணைநந்தத்தையும், ஞானி யின் மகிமையையும் கூறியிருக்கிறது. பிரம்மஞானத் தை அடைவதற்குச் சாதனமாக அந்தக்கரண சுத்தி யையும், அதற்குரியசாதனங்களாகிய கர்மமும்வாசனை தத்சம்பந்தி உபாஸ்ய காரியபிரமமும், காரணபிரமமும் முதலியவைகளைப்பற்றி சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கு தடைரூபமாகிய ஆவரணத்தை நீக்கு வதற்கு பகவானிடத்தில் பிரார்த்தனைசெய்யவேண்டும் என்றுசொல்லப்பட்டிருக்கிறது. யாருடைய ஆவரணம் நீங்கிவிட்டதோ அவர் ஜனனமரணத்திலிருந்து முக்த

ஞகிவிடுகின்ருர். அவருக்கு மீண்டும் ஜனனமரணம் உண்டாகிறதில்லை. ஆனால் யாருடைய ஆவரணம் பங்கமாகவில்லையோ அவருக்கு அவருடைய கர்மஉபாசனைக்கு அனுசாரமாக கதி அல்லது போக்குவரத்து உண்டாகிறது. அந்தக்கதி இன்னதென்றும் இவ்வாறு அடையப்படுகிறதென்றும் வருகிறமந்திரத்தில் கூறப்படுகின்றது.

17-வது மந்திரம்.

வாயுர்அனிலம் அம்ருதம் அதேதம் பஸ்மாந்தம்
சரீரம் |
ஓம்க்ருதோஸ்மர க்ருதம்ஸ்மர, க்ருதோஸ்மரக்ருதம்
ஸ்மர ||

ப-உ. வாயு:=பிராணவாயு, அனிலம்=லிங்க சரீரம்சூத்ராத்மாவோடுஒன்ருகி, அமிர்தம்=அமிர்தத்வத்தை அடையட்டும். அத=அனந்தரம்—பிறகு, பஸ்மாந்தம் சரீரம்=இந்த ஸ்தூல சரீரம் முடிவில் வெந்து நீருகின்றது. ஓம்க்ருதோஸ்மர—ஏ! சங்கல்பமயபுருஷ! நீ ஓம்காரரூப பரமாத்மாவை நினைக்கக் கடவாய், க்ருதம்ஸ்மர=உன்னுடைய உத்தம கருமங்களை நினைப்பாயாக. க்ருதோஸ்மர=ஏசங்கல்ப்ப பிரதானபுருஷ! நீ, தான்செய்த கருமத்தையும் அதாவது நல்வினை தீவினைகளை அடிக்கடி நினைப்பாயாக.

வி-உ. எதுவரை பிரம்மஞானத்தால் மூலாவித்தை நாசமாகவில்லையோ, அதுவரை லிங்கசரீரம் பங்கமாகிறதில்லை. அது சம்சாரசம்பந்திஞானத்தோடுகூடி கர்ம உபாசனைக்குரிய சம்ஸ்காரத்தினுல் சேர்ந்து கொண்டு அந்தந்த கர்மானுசாரம் கதியை யடைகின்

றது. இங்கு எந்த அமிர்தம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றதோ அது கர்மோபாசனையால்வரப்பட்டதாகும். சித்தஅமிர்தமன்று. ஆகையால் மகாப்பிரளயத்திற்குப் பிறகு சிருஷ்டியுண்டாகும்போது ஜனனமரணரூப சம்சாரத்திற்குத் திரும்பவேண்டியதுவரும். பிறகு முந்திய கருமானுசாரம் ஜன்மம், கருமம், போகம், ஆயுள் இவையெல்லாம் வந்து அடையும். ஆகையால் மனிதன் மரணசமயத்தில் நிரம்ப சாவதானமாக இருக்க வேண்டும். மூலஅஞ்ஞானம்இறந்துபோனல் ஸ்மிருதி, விஸ்மிருதி. ஜன்ம மரணமிவைகளைப்பற்றிச் சிந்திக்க வேண்டாம். அவ்வாறல்லாதுபோனல் இறுதியான ஜன்மமும் அடுத்தஜன்மத்திற்குக் காரணமாகின்றது.

"யம்யம்வாபிஸ்மரன்பாவம்த்யஜத்யந்தே கலேவரம் |
தம்தமேவைதி கௌந்தேய சதாதத்பாவபாவித:" ||

(கீதை) கௌந்தேய: அர்ஜுன! (எவன்) அந்தே= இறுதிகாலத்தில், யம் யம் வாபி பாவம் ஸ்மரன் = எந்த எந்த எண்ணங்களை நினைத்து கலேவரம் சரீரத்தை த்யஜதி = விடுகிறானே (அவன்) தம் தம் ஏதி = அந்தந்த எண்ணத்தின் பயனாகச் சரீரத்தை அடைகிறான் என்பதால், சதா = எப்போதும். தத்பாவ பாவித: = பிரஹ்ம சிந்தனைசெய்யவேண்டும் என்பது கீதையின் பொருள். எனவே மரணகாலத்தில் மதி சுத்தமாக இருக்கவேண்டும். மதியும் துன்பத்தையடைய காரணமாக இருக்கிறது. ஆகையால் இறுதிக்காலத்தில் இறைவன் ஸ்மரணம் வேண்டும். மனிதன் சங்கல்பமயனாக இருக்கிறான், சங்கற்பானுசாரம் இவனுக்கு ஸ்மிருதி, மதி, கதியுண்டாகின்றன. இவ்வாறிருக்க,

இறைவனை இடைவிடாது நினைக்கவேண்டு மல்லவா?

நினைக்கின்ற சாதனங்களில் நாமம் மேலான சாதனம், நாமத்தில் "ஓம்" என்னும் நாமம் உயர்ந்தது, "ஓமிதி பிரஹ்ம நாம" (சுருதி) ஓம் என்பது பிரஹ்மத்தின் நாமமாகும்.

"ஓமித்யேகாக்ஷரம் பிரஹ்ம வியாஹரன், மாமனுஸ்மரன். (கீதை) மரணகாலத்தில் ஓம்காரத்தை யுச்சாரணம் பண்ணிக்கொண்டு என்னை நினைக்க வேண்டும் என்று பகவான் கீதையில் கூறியிருக்கிருர். பிரணவத்தைச் சொல்லுகின்றபோது பிரபஞ்சாகார விருத்தி நீங்குகின்றது. ஜடத்வம் ஒழிகின்றது. தேகத்தில் உள்ள மோகங் குறைகிறது. உள்நோக்கம் உதயமாகின்றது. அதனுல் மரணபயம் அற்றுபோகிறது. சூக்குமஉடல் தனதிஷ்ட உலகத்திற்குப் போகும்பொருட்டு உதவியாக இருக்கிறது. ஏனெனின்? ஓங்காரம் ரக்ஷகனுகின்றது. பிரணவத்திற்கு கதிமேலே, ஆகையால் ஜீவனை விவேகவாயிலாக பரமார்த்தத்திற்கு எடுத்துச்செல்லுகின்றது. நாமம் எல்லாம் புனிதமாக இருந்தாலும் ஓம்என்னும்நாமம் அத்யந்தம் புனிதமாக இருப்பதால். எல்லாப் பாவங்களையும் எரித்துச் சாம்பராக்குகின்றது. பிரஹ்மத்திற்கு மூன்று நாமங்கள். ஓம் என்பது ஒன்று, தத் என்பது இரண்டு, ஸத் என்பது மூன்றுவதாகும், இம்மூன்றில் முந்திய நாமம் ஓம் ஆகும், ஆகையால் மரணகாலத்தில் இந்த நாமத்தை யுச்சாரணஞ்செய்வது மங்களகரம்.

ஈதல்லாமலும் நமதுசித்தம் உபாசனைகளை நினைக்க-நினைக்க மனத்தூய்மையும், ஒழுக்கமும் சித்தத்தில் நல்ல எண்ணமும், அறியாமை நீக்கமும், அறிவின் ஆக்கமும் உண்டாகின்றது. இவைகள் உண்டாகும் போது ஆனந்தாநுபூதி யுதயமாகிறது. இவ்வாறு மனிதன் நல்லகதியை அடைகிருன். இதுமூலமாக இந்த மந்திரத்திலி தூலதேக மோகத்தை விட்டுவிடு, இந்த தேகம் இறுதியில் வெந்து சாம்பராகின்றது. இருக்கும் போதும் ஜரை, நோய், புண் முதலிய தோஷத்தோடு கூடியது. சூக்கும சரீரம் சூத்ராத்மாவோடு கலந்து ஐக்யமாகட்டும். அதன்பொருட்டு பரமாத்மாவின் நாமத்தை ஜபிக்கவும், நமதுகர்மத்தை நினைக்கவுமாய் நாம் இருக்கவேண்டும்.

18-வது மந்திரத்தின் அவதாரிகை.

இந்த முறையாக கடைசிகாலத்தில் நல்லகதியை அடையும்பொருட்டு ஜீவனுக்கு என்ன என்ன செய்ய வேண்டும். எதையெதை நினைக்கவேண்டும், என்று கூறினபிறகு இறுதி பிரார்த்தனை யெவ்வாறு செய்ய வேண்டுமென்னும் சில முறைகளை வருகிற மந்திரத்தில் இயம்பப்படுகிறது.

18-வது மந்திரம்.

"அக்நேநய சுபதாராயே அஸ்மான்விஸ்வானி
தேவவயுநானி வித்வான் |
யுயோதி அஸ்மத்ஜுஹுராணமேநோ பூயிஷ்டாம்
தேநமஉக்திம்விதேம்" ||

ப-உ. அக்நே! = ஒளியுள்ள அக்னிதேவ! அஸ்மான் = எங்களை ராயே = (அழிவற்ற) ஐஸ்வரியத்தை

அடையும்பொருட்டு சுபதா=நல்லவழியில், நய=கூட்டிச்செல்வாயாக. ஹே தேவ=ஒளியுள்ளவரே (எங்கள்)விஸ்வானி வயுநானி = எல்லாவினைகளையும் வித்வான்=(நன்ருக) அறிந்திருக்கிறீர், அஸ்மத் = எங்களுடைய, ஜுஹுராணம் = வஞ்சனை, சூது,வாது இவைகளும். ஏநோ=பாவத்தையும், யுயோதி = நாசம் செய்வீராக. (நாங்கள்) தே=உமக்கு, பூயிஷ்டாம்= மீண்டும் மீண்டும், நம உக்திம் விதேம=வந்தனம் செலுத்துகின்ருேம்.

வி-உ. இந்த மந்திரம் சுக்லயஜுர்வேத சம்ஹிதையில்வருகின்ற மாத்யந்தினி, காண்வ சாகையிரண்டிலும் இறுதிமந்திரமாக அமைகின்றது. ஆகையால் இந்த மந்திரத்திற்கு அதிக மகத்துவமுண்டு. அக்னி ஆண்டவனுக்கு அறிகுறி ஆகையால் அக்னியிடஞ் செய்கின்ற பிரார்த்தனை இறைவனிடஞ் செய்ததாகிறது. இறைவன் விளையாட்டாகவே யிவ்வுலகத்தை சிருஷ்டிக்கிருன். அந்த சர்வஞ்ஞனிடம் வேண்டுகோள் விடுக்கப்படுகிறது. "லோகவத்துலீலா கைவல்யம்" (பிரஹ்ம சூத்திரம்) எங்களுக்கு நல்லகதியுண்டாகட்டும். இரண்டு கதிகள் சாஸ்திரத்தில் கூறியிருக்கின்றன. தக்ஷிணாயனம், உத்தராயணம். தக்ஷிணாயனம்நற்கதியன்று. ஆகையால் ஹே பிரபோ! எங்களையுத்தராயணமார்க்கமாக நடத்திச்செல்வாயாக. நாங்கள் தூமமார்க்கமாகச்செல்லமாட்டோம். அரிச்சிமார்க்கமாகச் செல்வோம். அக்னிதேவன் பிரகாசவடிவன்; தாஹகன் (எரிக்கும் தன்மையுடையவுன்). அக்னி, அக்ரணி, முன்னே, முன்னே செல்பவன். வெளிப்பட்டவன். ஆகையால் அக்னியினிடத்தில் எல்லா வலி

மைகளுமிருக்கின்றன, கடவுளின் கண்கண்டரூபம் அக்னி. "அக்னி மீளேப்புரோஹிதம்" (ருக்வேதம்) எல்லோருக்கும், நன்மைசெய்கின்ற அக்னி இறைவடிவாகும் என்பது பொருள். அவரை அடிக்கடி வணங்குவது அவரிடத்தில் நாம் வைக்கும் நம்பிக்கையும் பக்தியும் ஆகும்.

இந்த மந்திரத்தில் அக்னியும், தேவஎன்னும் பதமிரண்டும் இறைவனுக்கு வாசகம். நாமம் ஆகும், அவன்தான் கர்மங்களுக்குத் தலைவனும் சர்வ சாட்சியும் ஆவான். இறைவன் அருளால் ஜீவன் வஞ்சனை சூது வாது முதலிய அவகுணங்களிலிருந்து விடுபடுகின்றான். ஆயாசம் சோர்வு இல்லாமல் முயற்சியால் ஆண்டவனை அடையமுடியும். "அவனருளாலே அவன் தாள்வணங்கி" என்னும் திருவாசகமும் கூறுகின்றது. 'ஆகையால் நல்லவழியில் சென்று இஷ்ட தெய்வத்தை அடைவதற்காக மரணகாலமட்டுமல்லாமல் வாழ்நாள் முழுவதும் இறைவனை வழிபடவேண்டுமென்பது துணிபு. இறைவனை வழிபடுவதற்கு நம்மிடம் ஒருசாதனந்தான் இருக்கிறது. அது "நமோநமः", நமஸ்காரம்—அபிமானத்யாகம். மமதையை தியாகம் பண்ணுவதும் அகந்தையை தியாகம்பண்ணுவதும் ஆகும். சாதனம் சாத்யம், இரண்டையும் பற்றி இருக்கிறான் இறைவன். இறைவனை அடைவதுதான் அவனை சந்தோஷம்பண்ணி வைப்பது. வேறு உபாயமன்று.

இந்த மந்திரத்தில் அக்னிபதம் குருவுக்கும் வாசகம். குரு தேவரூபம், சூரியனிடத்திலும் அக்னியினிடத்திலும் ஒளியிருக்கிறது. குருவினிடத்தில் ஞானஒளி

யிருக்கிறது. ஆகையால் குரு தேவரூபன். குரு தனதூ மாணுக்கனை தன்வடிவமாகஆக்குவதற்கு முன்னிருக்கிருர். மாணுக்கன் = ஹே குரோ! நீர் தேவ, ஒளிமயமாவீர், எங்களுடைய யோக்கியதையை விருப்பத்தை மதி கதியையெல்லாம் அறிகின்றீர். ஆகையால் எங்களைத் தீயவழிகளிலிருந்து விலக்கி நல்வழியில் நடத்திச்செல்வீராக. எங்கள் உள்ளத்தில் வஞ்சனையும் சூதுவாதும் பாவமும் நிறைந்திருக்கின்றன. நீர் அவைகளை நன்ருகஅறிவீர். இவைகளை உம்முடைய ஞானக்கண்ணிஞல் எரித்து சாம்பராக்குவீராக. உம்மை நாங்கள் சரணமடைந்திருக்கின்ருேம். ஹே குருதேவ! உமக்கு மீண்டும் மீண்டும் வணக்கம்! வணக்கம்!!

சத்குருவின் உபதேச ஞானத்தால்தான் அதிகாரிகளுடைய பாபம் போகும். குருவாயிலாக அடைந்த ஞானந்தான் ஆவரணத்தை நீக்கி மோக்ஷத்திற்கு ஹேதுவாகின்றது. ஆகையால் குருவை இறைவஞகப் பாவிக்கவேண்டும் என்பது கருத்து. அவருடைய திருவடியில் நம் முடியைவைத்து கல்யாணசொரூப ஆத்மாவை அடைவோமாக.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

ஈஸாவாஸ்ய பிரவசனம் முற்றிற்று.



## பிரம்மானந்தஸ்வாமிகள் மடத்தின் புஸ்தக வெளியீடு

| | | |
|---|---|---|
| யுக்தி ரத்னகரம் | விலை ரூ | 12—00 |
| வாசிட்டம் | ,, | 15—00 |
| பக்தி ஞானம்ருதம் | ,, | 4—00 |
| லக்ஷணவிருத்தி | | 2—00 |



